

# ஞானப் புதையல்
# பஜ கோவிந்தம்
# விளக்கம்



# ஞானப் புதையல்

## (பஜ கோவிந்த விளக்கம்)


விளக்க உரை :

ஸ்வாமி ராதாகிருஷ்ண பாரதி

(K. R. ராதாகிருஷ்ணன்)



வெளியீடு :

ஸ்ரீ K. ராமகிருஷ்ண பிள்ளை நினைவு அறக்கட்டளை

193, திருவேங்கிடசாமி ரோடு,

ஆர். எஸ். புரம் — கோவை - 2.

ஹரி ஓம்

# ஞானப் புதையல்

## (பஜ கோவிந்த விளக்கம்)

## முகவுரை

பகவத் கீதையில் மூன்றாவது அத்தியாயம், 38வது ஸ்லோகத்தில், ''நெருப்பு புகையினாலும், கண்ணாடி அழுக்கினாலும், சிசு கருப்பையினாலும் மூடப்பட்டிருப்பது போன்று ஞானம், ஆசையினாலும், அஞ்ஞானத்தினாலும் மூடப்பட்டிருக்கிறது'' என்று பகவான் கூறுகிறார்.

இதே கருத்தை, 'மேகம் சூரியனை மறைப்பது போல மாயை ஈசுவரனை மக்களிடமிருந்து மறைக்கிறது. மேகம் விலகிச் சென்றதும், சூரியன் தெளிவாக காணப்படுகிறது. அதுபோல மாயை அகன்றதும், மக்களுக்கு ஈசுவரனின் காட்சி கிடைக்கிறது' என்று பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறுகிறார்.

அதன்படி மக்களுடைய ஆசைகளும், உலகப் பற்றுகளும் அவர்களை குழப்பத்தில் ஆழ்த்துவதால், அவர்களுக்கு வாழ்க்கையில் மேன்மை அடைய வழி வகைகள் தெரியாமல் தவிக்கின்றனர்.

மனித வாழ்க்கை ஒரு கூட்டுப் புழுவை போன்றது. பட்டுப்புழு தன்னுடைய பட்டு நூல்களால் தன்னைச் சுற்றி ஒரு கூட்டை அமைத்துக் கொண்டு, அதற்குள் சிலகாலம் உறக்க நிலையில் இருந்து பிறகு, அழகிய பட்டுப் பூச்சியாக வெளியே வந்து வான வெளியில் பறந்து செல்லுகிறது.

அதே மாதிரி, மக்களும் தங்களுடைய வாழ் நாட்களில் பணம், உலக அறிவு, பெரும் பதவிகள், சுற்றத்தார்கள் முதலிய பந்தங்களால் தங்களைச் சுற்றி ஒரு கூட்டை உண்டாக்கி, அதற்குள் உறக்க நிலையில் வாழ்ந்து, பலவிதமான அனுபவங் களுக்குப் பிறகு வாழ்க்கையில் நிறைவு பெறு கிறார்கள்.

பட்டுப் புழு கூட்டுப் புழுவாக மாறாமல் பட்டுப் பூச்சியாக மாறமுடியாது. அதேமாதிரி, மக்களுக் கும் உலக அனுபவங்கள் இல்லாமல், உலக பந்தங் களிலிருந்து விடுதலை அடைய முடியாது.

அம்மாதிரி உலக அனுபவங்கள் என்னும் உறக்க நிலையில் வாழ்ந்து கொண்டிருக்கும் மக்களை விடுதலை அடைய தூண்டுவது ''**பஜ கோவிந்தம்**''.

''உலகில் வாழும் மக்கள் எல்லோருமே வாழ்க்கையில் அமைதியாகவும், ஆனந்தமாகவும், சுகமாகவுமே வாழ விரும்புகிறார்கள். அதன் பொருட்டே பலவிதமான காரியங்களையும் செய்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் இறுதியில் எதிர் பார்த்த பலன் கிடைக்காமல் ஏமாற்றமே அடை கிறார்கள். அவர்களுக்கு சுகத்தைக் கொடுக்கும் என்று எண்ணி சேர்த்து வைக்கும் பணம், வீடு, வாசல், வாகனங்கள், பந்துக்கள், பட்டம், பதவி முதலியவைகளினால் அவர்களுக்கு அமைதியும், ஆனந்தமும் கிடைப்பதில்லை.

உலகில் பெருவாரியான மக்களுடைய அனு பவங்கள் இதே மாதிரி கசப்பானதாக இருந்தா லும், நாம் மீண்டும், மீண்டும் அதே மாதிரி தவறான காரியங்களையே செய்து கஷ்டங்களை அனுபவித்துக் கொண்டிருக்கிறோம். அதற்கு

காரணம் நாம் சரியான முறையில் சிந்தித்து செயலாற்றுவதில்லை. அம்மாதிரி உறக்க நிலையில் வாழ்ந்து கொண்டிருக்கும் மக்களுக்கு விழிப்புணர்வை உண்டாக்க உதவுவது ''பஜ கோவிந்தம்!''

மக்கள் ஒவ்வொருவரும் தங்களுக்குத்தான் பிரச்சனைகள் இருப்பதாக நினைக்கிறார்கள். குடிசைகளில் வாழ்ந்து கொண்டு அடுத்தவேளை உணவுக்கும் வழியில்லாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் ஏழை எளிய மக்கள், செல்வந்தர்களையும் வசதி மிக்கவர்களையும் பார்த்து பொறாமை கொள்ளுகிறார்கள். ஆடம்பரமான மாளிகைகளிலும், பெரிய பங்களாக்கள் அல்லது வீடுகளிலும் வசிப்பவர்கள் எல்லோரும் எப்போதும் ஆனந்தமாகவும், அமைதியாகவும் வாழ்ந்துகொண்டிருப்பதாக நினைக்கிறார்கள். ஆனால், பணம் படைத்தவர்களுக்கு எல்லா விதமான வசதிகளும், வாகனங்களும் இருந்த போதிலும் அவர்களுக்கும் பலவிதமான பிரச்சனைகள் இருப்பதையும், அவர்கள் சரியான உறக்கம் கூட இல்லாமலும், ஆரோக்கியம் இன்றியும் தவித்துக் கொண்டு இருப்பது மற்றவர்களுக்குத் தெரிவதில்லை. ''விரலுக்கு தகுந்த வீக்கம்'' என்று சொல்லுவது போல பெரிய மக்களுடைய பிரச்சனைகளும் பெரியதாகவே இருக்கிறது.

மனித வாழ்க்கை சிக்கலானது என்று பலரும் எண்ணுகிறார்கள். மற்றும் சிலர் பிரச்சனைகள் நிறைந்தது என்று கூறுகிறார்கள். அது தவறான கருத்தாகும். ஏனெனில் பிரச்சனைகள் இயற்கையானவை அல்ல. நாமாகவே நமது பிரச்சனைகளை உண்டாக்கி வாழ்க்கையை சிக்கலானதாக செய்து, கஷ்டங்களை அனுபவிக்கிறோம். நமது பிரச்சனைகள் தோன்றுவதற்கு உரிய காரணங்களை சிந்தித்து செயலாற்றினால் பெருவாரியான பிரச்சனைகளை தவிர்த்து வாழமுடியும்.

மற்றும் சிலர் வாழ்க்கையில் வெற்றி காண என்ன செய்ய வேண்டும் என்பதையும் எதை செய்யக்கூடாது என்பதையும் தெரியாமல் குழப்பத்தில் வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள்.

'வாழ்க்கை' என்பது ஒரு பிரச்சனையான காரியமே அல்ல, ஆனால் புதிரானது, அதை புரிந்து கொண்டு இயற்கையின் நடைமுறைகளை அனுசரித்து வாழ பழகிக்கொண்டால் ஒவ்வொருவரும் அவர்களது வாழ்க்கையை சொர்க்கமாக ஆக்கமுடியும். அதற்கு வேண்டியது எல்லாம் விழிப்பு உணர்வும், விடா முயற்சியும், திடசித்தமும், முறையான பயிற்சியும்தான்.

> ''அறம், பொருள், இன்பம்
> வீடு அடைதல் நூற் பயனே''

என்பது சான்றோர் வாக்கு.

அதன்படி நாம் படித்தும் கேட்டும் தெரிந்து கொள்ளும் அறிவுகளால், நமக்கு அமைதியும், ஆனந்தமும் கிடைக்காதவரை அந்த நூல்களாலும், அறிவுகளாலும் எந்தவிதமான பயனும் இல்லை.

ஒரு மனிதன் சென்னையிலிருந்து காரில் புறப்பட்டுச் சென்று பம்பாய் நகரை அடைய வேண்டுமானால், அவன் அவ்வப்போது பாதையில் பல பிரிவுகள் ஏற்படும் சந்திப்புகளில் உள்ள வழி காட்டும் பலகைகளைப் பார்த்து அவைகள் காட்டும் மார்க்கங்களில் சென்றும், ஆங்காங்கு உள்ள மக்களிடம் கேட்டுத் தெரிந்து கொண்டும் சென்று

இறுதியில் அவன் சேர வேண்டிய இடத்தை அடைய வேண்டும்.

ஆனால் அந்த மனிதன் வழி காட்டும் பெயர் பலகையில் ''பம்பாய்'' என்று எழுதியிருப்பதைப் பார்த்து அதுதான் அவன் சென்று அடைய வேண்டிய இடம் என்று நினைத்து அவனுடைய பயணத்தைத் தொடராமல் அதனடியில் உட்கார்ந்து விட்டால் ஒரு நாளும் அவனுடைய குறிக்கோளாகிய 'பம்பாயை' அடைய முடியாது.

அதேமாதிரி நாமும் நமது வாழ்க்கையின் இறுதி லட்சியமான ''முக்தி''யை அடைய வேண்டுமானால் அற நூல்கள் காட்டும் வழியில் வாழ்ந்து பயன் அடைய வேண்டும். அவ்வாறு செய்யாமல் வேதங்களை வைத்து பூஜை செய்வதாலும், விக்கிரகங்களை வணங்குவதாலும், யாகங்கள் செய்வதாலும், அற நெறிகளைப் பேசுவதாலும் நீதி நூல்களைப் படிப்பதாலும் மட்டுமே முக்தி கிடைக்காது. அத்துடன் பணம், பதவி, பட்டம் முதலியவைகளிலிருந்தும் நாம் எதிர்பார்க்கும் அமைதியையும், ஆனந்தத்தையும் அடைய முடியாது.

இந்தக் கருத்தை வலியுறுத்திக் கூறி நமக்குத் தெளிவை உண்டாக்குவது ''பஜ கோவிந்தம்''.

இந்த உண்மைகளை எனது அனுபவத்திலும் கண்டு பயனடைந்திருக்கிறேன். எனது அனுபவங்கள் மற்றவர்களுக்கும் பயனுள்ளதாக இருக்க

வேண்டும் என்னும் நோக்கத்துடன் இந்த விளக்கத்தை எழுதியிருக்கிறேன். தாங்களும் படித்து, சிந்தித்து பயனடைய வேண்டுகிறேன். பிழைகள் இருப்பின் பொறுத்தருளவும், சுட்டிக்காட்டவும் வேண்டுகிறேன்.

இச்சிறு வெளியீட்டை எங்களுடைய அன்புத் தந்தையார் ஸ்ரீ கே. இராமகிருஷ்ண பிள்ளை அவர்களுடைய 19வது நினைவு நாள் மலராக உங்கள் முன் சமர்ப்பிப்பதில் மகிழ்ச்சி அடைகிறேன். வணக்கம்.

அன்புள்ள,

ஸ்வாமி ராதாகிருஷ்ண பாரதி
(கே. ஆர். ராதாகிருஷ்ணன்)

### மனிதப் பிறவியின் மாண்பு

அரியது கேட்கின் வரிவடி வேலோய்!
அரிதுஅரிது மானிடர் ஆதல் அரிது!
மானிடர் ஆயினும் கூன்குருடு செவிடு
பேடு நீங்கிப் பிறத்தல் அரிது!
பேடு நீங்கிப் பிறந்த காலையும்
ஞானமும் கல்வியும் நயத்தல் அரிது!
ஞானமும் கல்வியும் நயந்த காலையும்
தானமும் தவமும் தான்செயல் அரிது!
தானமும் தவமும் தான்செய்வர் ஆயின்,
வானவர் நாடு வழிதிறந் திடுமே.

— ஔவையார்

ஓம்

ஸ்ரீ குருவே துணை

# ஞானப் புதையல்

## (பஜ கோவிந்த விளக்கம்)

## முன்னுரை



உலகில் ஒவ்வொரு மனிதனிடமும் பலவிதமான ஆசைகளும், உணர்ச்சிகளின் வேகமும், பகுத்தறிவின் சிந்தனைகளும் குழம்பிக்கிடக்கிறது. அதனால், அவர்களுக்கு வாழ்க்கையில் அனுசரிக்க வேண்டிய நியதிகளையும், செய்யக்கூடாத காரியங்களையும் தெளிவாக அறிந்து கொள்ள முடிவதில்லை. நமது ஆசைகளும், உணர்ச்சிகளும், பகுத்தறிவும், ஒரு நியதிக்கு உட்பட்டு செயல்படும்போது, மனிதனுக்கு ஒழுக்கமும், அதனால் அமைதியும், ஆனந்தமும் உண்டாகிறது. அம்மாதிரி குழப்பத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் மக்களுடைய வாழ்க்கையில் தெளிவையும், மறுமலர்ச்சியையும் உண்டாக்க வழிகாட்டுவது ''பஜ கோவிந்தம்''.

உலகப் பொருள்களிலும், உற்றார், உறவினர்களிடமும் பற்றுவைத்து வாழ்பவர்களுக்கு வாழ்க்கையில் எவ்வளவு செல்வங்களும், செல்வாக்கும் இருந்தபோதிலும், அவர்களுக்கு அதனால் எதிர்பார்த்த அமைதி கிட்டாமல் ஏமாற்றமே ஏற்படுகிறது. ஆனால் ஆன்மாவை அனுபவத்தில் உணர்ந்து, உலகப்பற்றுகளை அறுத்து, ஆன்மீக வாழ்க்கை வாழ்பவர்கள் எந்தவிதமான சூழ்நிலையில் இருந்தாலும் அவர்கள் எப்போதும் ஆனந்தத்தில் திளைத்து இருப்பார்கள்.

உலக வாழ்க்கையின் நிலையில்லாத் தன்மையை மக்களுக்கு விளக்கிக்கூறி நிலையான பேரின்பத்திற்கு வழி காட்டுவது ''பஜ கோவிந்தம்''

துன்பகரமான உலக வாழ்க்கையிலிருந்து 'முக்தி' அல்லது 'விடுதலை' அடையவும், வாழ்க்கையை பயனுள்ளதாக ஆக்கி நல்வாழ்வு வாழவும், மக்களை சிந்திக்கத் தூண்டுவது ''பஜ கோவிந்தம்''

நமது வாழ்க்கையில் நாம் கற்றுத் தெரிந்து கொள்ளும் எல்லா அறிவுகளிலும் சிறந்த அறிவாகிய ''தன்னைத்தான் அறிந்து, தன் உணர்வு பெறுவதையும்'' எங்கும் நிறைந்துள்ள உண்மைப் பொருளை உள்ளபடி உணர்ந்து கொள்ளும் அறிவையே ''ஞானம்'' என்று கூறப்படுகிறது. அத்துடன் நமக்கு அறிவில் தெளிவை உண்டாக்கும் அனுபவங்களையும் 'ஞானம்' என்று கூறலாம்.

மனிதனுக்கு அறிவில் தெளிவும், ஆன்ம விழிப்பும் உண்டாகும்போது, வாழ்க்கையின் உண்மையான நிலை நன்கு விளங்குகிறது. அப்போது, வாழ்க்கையை முறையாகவும், முழுமையாகவும் வாழ்ந்து, ஆன்ம ஞானத்தைப் பெறவும். பிறவிப் பிணியிலிருந்து, 'விடுதலை' அல்லது 'முக்தி' அடையவும், வழிவகைகள் நன்கு தெரிகிறது. அம்மாதிரி முறையான வாழ்க்கைக்கு வழிகாட்டுவது ''பஜ கோவிந்தம்''.

பூமியைத் தோண்டும்போது, சற்றும் எதிர்பாராத வகையில் ஒரு பெட்டி அல்லது பாத்திரத்தில் தங்க நகைகள், பொற்காசுகள், வெள்ளி நாணயங்கள் போன்ற விலை உயர்ந்த பொருள்கள் கிடைப்பதையே 'புதையல்' என்று கூறப்படுகிறது. புதையலை அடைய எல்லோரும் விரும்புகின்றனர்.

மக்களுக்கு 'புதையல்' கிடைக்கும்போது பெரு மகிழ்ச்சியும் உண்டாகிறது. ஆனால், அம்மாதிரி கிடைக்கும் புதையல்களால், அவர்களுக்கு அரசாங்கத்தாரிடமிருந்தும், கள்வர்களிடமிருந்தும் பயமும் ஏற்படுகிறது. உலகப் பொருள்கள் அடங்கிய 'புதையல்'கள் நமக்கு நீடித்த சுகத்தை உண்டாக்காது. அம்மாதிரி கிடைக்கும் பொருள்களை இழக்க நேரிடும் போது, துன்பங்களை அனுபவிக்கவும் வாய்ப்பு உண்டு. அதேமாதிரி நமது புலன்களால் அனுபவிக்கும் இன்பங்களும், உடலின் மீது பற்றுவைத்து வாழ்வதும் இறுதியில் ஏமாற்றத்தையே உண்டாக்குகிறது.

ஆனால் நமக்குள்ளேயே வற்றாத ஊற்றாகிய 'ஆன்மதிருப்தி' என்னும் புதையல் இருப்பதைக் கண்டு உணர்ந்து கொண்டால் எப்போதும் அழிவில்லாத பேரானந்தத்தை அனுபவிக்க முடியும். இந்த 'ஆன்மீகபுதையலை' எவராலும் கவர்ந்து செல்ல முடியாது. அந்த அனுபவத்திற்கு ஈடான ஆனந்தம் வேறு கிடையாது. அம்மாதிரி உண்மையான புதையலாகிய பேரின்பத்திற்கு வழிகாட்டியாக விளங்குவது 'பஜ கோவிந்தம்'.

உலக வரலாற்றில் மனிதனுடைய சாதனைகள் மகத்தானவை. அவனுடைய அறிவின் வளர்ச்சியினால் அநேக அரிய, பெரிய காரியங்களை செய்து வெற்றி கண்டிருக்கிறான். அவனுடைய முயற்சியினால் விஞ்ஞானம் கற்பனைக்கும் எட்டாத அளவு வளர்ந்திருக்கிறது. இன்றைய உலகம் அவனுக்கு மிகவும் சிறியதாக தோன்றுகிறது.. அவனுடைய திறமையினால் ஒரே நாளில் உலகை சுற்றி வந்துவிடும் வேகமான வாகனங்களை உருவாக்கியிருக்கிறான். உலகத்தின் ஒரு கோடியில் நடைபெறும் நிகழ்ச்சிகளை அதே நேரத்தில் உலகின் மறு

கோடியில் இருப்பவர்களும் கண்டு களிக்கும் நூதனமான கருவிகளை உண்டாக்கி இருக்கிறான். மருத்துவத்துறையிலும் மகத்தான முன்னேற்றம் கண்டிருக்கிறான். மக்களுடைய ஆயுளை நீடிக்கவும், அவர்களுடைய உறுப்புக்களையும், உருவங்களையும் மாற்றி அமைக்கவும், ஆணும், பெண்ணும் உறவு கொள்ளாமலேயே மகவுகளை உண்டாக்கவும் வல்லமை பெற்றுவிட்டான். கடலில் உள்ள உப்பு நீரை இனிய குடிநீராக மாற்றவும், பூமிக்குள் பல்லாயிரம் அடிகளுக்கும் கீழே உள்ள எண்ணெய் களையும் எரிவாயுப் பொருட்களையும் கொண்டு, இரவை பகலாக மாற்றும் திறமையும் பெற்று விட்டான். சந்திரனில் கூட அவனது காலடிகள் பதிந்துவிட்டன. விரைவிலேயே மற்ற கிரகங் களுக்குச் செல்லவும், வான வெளியில் நகரங்களை உருவாக்கவும் தீவிரமான முயற்சிகள் செய்து கொண்டிருக்கிறான்.

அதே மாதிரி, உலகம் முழுவதிலும் உள்ள சகல பொருள்களையும், அனைத்து ஜீவராசிகளை யும் ஒரே நாளில் புல், பூண்டுகூட இல்லாமல் அழித்து விடக் கூடிய பயங்கரமான ஆயுதங்களையும், உருவாக்கி தயாராக கையில் வைத்துக்கொண் டிருக்கிறான்.

இவ்வாறு பலதுறைகளிலும் இயற்கையை எதிர்த்துப் போராடி, ஓரளவு வெற்றி கண்டிருந் தாலும், ''மனிதனுக்கு மனிதனாக வாழமட்டும் தெரியவில்லை'' என்று ஒரு அறிஞர் கூறுகிறார். ஏனெனில் ''மக்கள் உலகில் வாழும் ஜீவராசிகள் எல்லாவற்றிலும் சிறந்ததாகிய மனிதப் பிறவியை புரிந்துகொண்டு பயனுள்ளதாக வாழவும் அதன் இறுதி குறிக்கோளாகிய 'முக்தியை' அடையவும் முயற்சி செய்யாமல் போலியானதும், அற்ப சுகத்

தைக் கொடுக்கக் கூடியதுமான பணம், பதவி, பட்டம், பந்துக்கள் முதலியவைகளின் மீது பற்று வைத்து, அந்த மயக்கத்திலேயே வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள்'', என்பதை குறிப்பிடுகிறார். உலகப்பற்றை அறுக்காத வரையில் உண்மைப் பொருளை உணரமுடியாது. அதனால்தான் ''ஊசியின் காதில் ஒட்டகம் நுழைந்தாலும் பணக்காரன் சொர்க்கத்தின் வாசலில் நுழைய முடியாது'' என்று இயேசுநாதர் கூறுகிறார்.

பெருவாரியான மக்கள் புறப்பொருள்களிலும் மற்றவர்களைப் பற்றி ஆராய்ச்சி செய்வதிலுமே அதிக ஆவல் உள்ளவர்களாக இருப்பதால், அவர்கள் தங்களைப் பற்றி சிந்திக்க தவறிவிடுகின்றனர். தன்னைப்பற்றியும், தனக்குள் இருக்கும் ஆன்மாவைப்பற்றியும் அறிந்து கொள்ளும் அறிவையே, 'ஞானம்' என்று கூறப்படுகிறது. அதற்கு ஈடான அறிவு வேறு கிடையாது. தன்னைத்தான் அறிவதால் மட்டுமே முக்தி நிலையை அடைய முடியும்.

மனித வாழ்க்கை அவனுடைய 'அக உலகம்' என்றும், 'புறஉலகம்' என்றும் இரண்டு பகுதிகளாக இயங்கிக் கொண்டிருக்கிறது நமது உயிரும், உணர்வுகளும், அந்தக்கரணங்களாகிய மனம், புத்தி, ஆன்மா, அகங்காரம், முக்குணங்கள் முதலிய சூட்சும சக்திகள் நமக்குள் இருந்து செயல்படுவதை நமது 'உள் உலகம்' என்றும் நமது புலன்களின் வாயிலாக வெளியே உள்ள பொருள்களிடத்திலும், மக்களிடத்திலும் நமக்கு ஏற்படும் அனுபவங்களை, நமது 'வெளி உலகம்' என்றும் கூறப்படுகிறது.

மக்களுடைய ''உள் உலகம்'' இயங்கும் விதத்தையும், அதில் நடைபெறும் இரகசியங்களையும்

விளக்கிக் கூறுவது 'பகவத் கீதை'. அதே மாதிரி நமது வெளி உலகத்தின் நடைமுறைகளையும், அதில் நமக்கு ஏற்படும் அனுபவங்களையும், அதன் இயல்பு களையும் தெளிவுபடுத்திக் கூறி வாழ்க்கையின் நிலை இல்லாத் தன்மையை நாம் புரிந்துகொள்ள உதவுவது 'பஜ கோவிந்தம்'!

'மனித வாழ்க்கை மிகவும் புதிரானது' என்று 'பகவத் கீதை' கூறுகிறது அதே மாதிரி, 'சம்சாரம்' என்னும் வாழ்க்கைச்சுழலின் அனுபவங்கள் விசித்திரமானது என்று பஜ கோவிந்தம் விளக்கு கிறது.

'வாழ்க்கை புதிரானது' என்றால், உலகமும் அதிசயிக்கத்தக்க முறையில் அது செயல்படும் விதமும், நாம் எங்கிருந்து வந்து இங்கு பிறந்திருக் கிறோம் என்பதும், உலகில் ஜீவன்கள் பிறப்பதும், பிறகு மறைவதும், மண்ணிலிருந்து மரம், செடி, கொடிகள் தோன்றுவதும் அழிவதும், பருவ காலங் கள் மாறி, மாறி வருவதும் ஒரே நாளில் பாதி இரவாகவும், பாதி பகலாகவும் இருப்பதுவும், மக்களுக்கு சுகமும், துக்கமும் உண்டாவதும், இம் மாதிரி ஏராளமான நிகழ்ச்சிகள் ஏன் நடைபெறு கிறது என்பதோ, எவ்வாறு நடைபெறுகிறது என்பதோ, யார் இதை இயக்குகிறார்கள் என்பதோ எவருக்குமே புரிந்துகொள்ள முடியாத புதிராகவே இருந்து வருகிறது, என்பதை குறிக்கிறது. அதே மாதிரி மக்களுக்கு நல்ல காரியங்களை செய்வதைவிட தவறான செயல்களில் விருப்பம் அதிகமாக இருக் கிறது. இதையே 'உலகமாயை' என்று கூறப்படு கிறது. இது இயற்கை நம்மை சோதிக்கும் வண்ணம் நம்மீது செய்யும் ஒருவித சூழ்ச்சியாக கருதலாம். ஆதலால், நாம் வாழ்க்கையில் மிகுந்த எச்சரிக்கை யுடனும், விழிப்புணர்வுடனும் வாழ வேண்டி இருக்கிறது.

உலகில் பிறந்துள்ளவர்களில் எவராக இருந்தாலும், இயற்கையை எதிர்த்து வெல்லவோ அல்லது மாற்றி அமைக்கவோ முடியாது. ஆனால், புதிராக உள்ள நமது வாழ்க்கையை புரிந்துகொள்ளும் அளவுக்கு பிரச்சனைகளையும், கஷ்டங்களையும் ஓரளவு குறைக்க முடியும். அதே மாதிரி, நமது வெளி உலக வாழ்க்கையின் உண்மையான நிலையை கண்டு கொள்ளும் அளவுக்கு நமது அறிவில் ''விழிப் புணர்வு'' ஏற்படுகிறது.

மக்களுக்கு ஞானமும், விழிப்புணர்வும் உண்டாகும்போது அவர்களுக்கு வாழ்க்கையின் நிலையில்லாத் தன்மை தெளிவாக விளங்குகிறது. அதனால் வாழ்க்கையில் ஏற்படும் பயம், ஏமாற்றம், விரக்தி, அதிர்ச்சி, சந்தேகம் முதலிய கஷ்டமான அனுபவங்களை தவிர்த்து வாழ உதவுகிறது. அப்போது அவர்கள் விழிப்புணர்வுடன் வாழ்க்கையை முழுமையாக வாழ்ந்து பயனடையவும், அதன் இறுதி லட்சியமான 'முக்தி' அல்லது 'விடுதலை' அடையவும் வழிவகைகளை காணவும் முடிகிறது. அம்மாதிரி மக்களுக்கு ஞானத்தையும், அறிவில் தெளிவையும் உண்டாக்க உதவுவது ''பஜ கோவிந்தம்''.

நாம் வாழ்க்கையில் அமைதியாகவும், ஆனந்தமாகவும் வாழவேண்டுமானால், நமது உள் உலகம் செயல்படும் விதத்தையும், புறஉலகில் ஏற்படும் அனுபவங்களையும் ஆக இரண்டையுமே நன்கு புரிந்துகொள்ள வேண்டியது அவசியமாக இருக்கிறது.

நமது வெளி உலக அனுபவங்கள் உண்மையானவை அல்ல. அத்துடன் அவை நிலையற்ற தன்மையானதாகவும் இருக்கிறது. நிலையற்ற புறப் பொருள்களிலிருந்து நமக்கு கிடைக்கும் இன்பமும்

நிலையற்றது. நிலையற்ற புறப்பொருள்கள்மீது பற்றுவைத்தால், அவை அழிய நேரிடும்போது நமது சுகத்துக்கு காரணமாகயிருந்த அதே பொருள்களால் நமக்கு துன்பமும் ஏற்பட வாய்ப்புண்டு. ஆனால், நமது உள் உலக அனுபவமாகிய ஆன்ம சுகம் அழிவற்றது தெய்வீகமானது. நீடித்த சுகத்தை கொடுக்கக் கூடியது. அதனால்தான் ''தன்னிலே தான் இன்புற்றவனுக்கு பிற பொருள்களை நாடிப்போக வேண்டிய அவசியம் இல்லை'' என்று பகவத் கீதை கூறுகிறது. ஆன்ம சுகத்தினால் ஏற்படும் பேரின்ப அனுபவங்களையும் சிறப்புகளையும் தெரிந்து கொள்ளும் அறிவையே 'ஆன்ம ஞானம்' என்றும், அதை அனுசரித்து வாழ்வதையே 'ஆன்மீக வாழ்க்கை' என்றும் கூறப்படுகிறது. அம்மாதிரி மக்களுக்கு ஆன்மீக வாழ்க்கையில் நாட்டத்தை உண்டாக்க தூண்டுகோலாக உதவுவது 'பஜ கோவிந்தம்'!

மக்களுடைய தற்கால வாழ்க்கை முறைகள் இயற்கையின் விதிகளுக்கு முரண்பட்டதாக இருக்கிறது. அதனால் இயற்கையான வாழ்க்கையிலிருந்து அவர்கள் நாளுக்கு நாள் விலகிச் சென்று கொண்டிருக்கிறார்கள். நாகரீகத்தின் வளர்ச்சியினால் மக்கள் இயற்கையின் நடைமுறைகளையும், அதில் அவர்கள் அனுசரிக்க வேண்டிய நியதிகளையும் மறந்து செயற்கையானதும் அவர்களுக்கு கஷ்டங்களையும், அழிவையும் உண்டாக்குவதுமான காரியங்களை செய்து கொண்டிருக்கிறார்கள்.

நமக்கு அற்ப சுகத்தைக் கொடுக்கும் மது அருந்துதல், போதை பொருட்களை உபயோகித்தல், புகை பிடித்தல், சிற்றின்பங்களில் அதிக ஆவல் கொள்ளுதல், அளவுக்குமீறி உண்ணுதல், உண்ணக் கூடாதவைகளை உண்ணுதல், சுகாதார வசதிகள்

இல்லாத இடங்களில் வசித்தல் முதலிய தீய பழக்கங்கள் இறுதியில் மக்களுடைய உயிரையே உறிஞ்சி விடுகிறது. அம்மாதிரி தீய பழக்கங்களுக்கு அடிமையாகாமல் விழிப்பு உணர்வுடன் வாழ நமக்கு வழிகாட்டியாக விளங்குவது 'பஜ கோவிந்தம்'.

அசதோமா சத்கமய
தமசோமா ஜோதிர் கமய
மிருத்யோர் மா அமிர்தங்க மய
ஓம் சாந்தி, சாந்தி, சாந்தி.

என்று உபநிஷதம் கூறுகிறது.

அதன்படி 'அறியாமை' என்னும் இருளில் வாழ்ந்து அழிவுப்பாதையில் சென்றுகொண்டு இருக்கும் மக்களுக்கு, அறிவு என்னும் வெளிச்சத்தை கொடுத்து, நமது வாழ்க்கைப் பாதையில் உள்ள ஆபத்துக்களான ஆசை, பொருமை, கோபம், ஆணவம், பற்றுதல் முதலிய குழிகளில் விழுந்து, அதில் சிக்கிக்கொண்டு தவிக்காமல நாம் அமைதியாக வாழவும், நமது வாழ்க்கையை பயனுள்ளதாக ஆக்கவும் வழிகாட்டியாக விளங்குவது அமரகாவியமான 'பஜ கோவிந்தம்'.

மக்களுடைய கஷ்டங்களுக்கெல்லாம் மூலகாரணமாக விளங்குவது அவர்களுடைய ஆசைகளேயாகும். அத்துடன் புலன்களில் இன்பம் காண விழைவதும், அவர்களுடைய மனைவி, மக்கள், மற்ற உலகப் பொருள்கள்மீது உள்ள பற்றுதலும் துன்பத்தை உண்டாக்குகிறது. ஆதலால், நாம் நமது ஆசைகளை விட்டு ஒழிக்க வேண்டும். அதற்கு வழிகாட்டியாக உதவுவது ''பஜ கோவிந்தம்''. அதனால் அதை ''மோக முத்கரம்'' என்றும்

கூறுவது உண்டு. மோக முத்கரம் என்ருல் ஆசைகளை அடியோடு அழித்தல் என்று பொருள்.

பஜ கோவிந்தத்தில் கூறியுள்ள அறிவுரைகளை நாம் எந்த பள்ளிக்கூடத்திலோ அல்லது நூல்களிலிருந்தோ கற்றுத் தெரிந்து கொள்ள முடியாது. அனுபவத்தால் மட்டுமே உணர முடியும்.

நமது வாழ்க்கையில் பொதிந்து கிடக்கும் இரகசியங்களை எல்லாம் நாமே நமது அனுபவத்தால் உணர்ந்து தெரிந்து கொள்ள நமது ஆயுள் போதாது. அத்துடன் அந்த இரகசியங்களை கூர்ந்து கவனித்து, தெளிவு பெறும் ஆற்றலும் நம்மிடம் இல்லை. ஆதலால், நமது வாழ்க்கை சிக்கலை அறுத்து, அதை பயனுள்ளதாக ஆக்க, நமக்கு முன் வாழ்ந்த அறிஞர் பெருமக்களும், பெரியோர்களும், மகான்களும் கூறியுள்ள அறிவுரைகளை கேட்டு, அவர்கள் காட்டும் வழியில் சென்று பயனடைய வேண்டியது நமது கடமையாக இருக்கிறது.

அம்மாதிரி மக்களுடைய நல்வாழ்வுக்கு வழி காட்ட வந்த அநேக மகான்களில் தலைசிறந்த ஞானியாக விளங்கிய பகவான் ஸ்ரீ ஆதி சங்கரர் அவர்களால் இயற்றப்பட்டது ''பஜ கோவிந்தம்''.

ஸ்ரீ பகவத் பாதர் அவர்கள் பாரததேசம் முழுவதும் கால் நடையாகவே சுற்றி, சிதறிக் கிடந்த இந்து தருமத்தை நிலைநாட்டிய ''புண்ணிய புருஷர்'' என்று மக்களால் மதிக்கப்படுகிருர்கள்.

ஸ்ரீ சங்கர பாதர்கள் பஜ கோவிந்தத்தில் தினசரி நமது வாழ்க்கையில் நடைபெறும் சாதாரண நிகழ்ச்சிகளையே மிக அழகாகவும், தெளிவாகவும்,

சுட்டிக்காட்டி, நமக்கு விழிப்புணர்வை உண்டாக்கு கிறார்கள், அந்தக் கருத்துக்களை நன்கு நினைவில் கொண்டால், நமக்கு வாழ்க்கையில் ஏற்படும் ஏமாற்றம், விரக்தி, பயம், அதிர்ச்சி முதலிய கஷ்ட மான அனுபவங்களை தவிர்த்து நல்வாழ்வு வாழலாம்.

பஜ கோவிந்தமும், பகவத் கீதையைப்போல் அநேக மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டிருக் கிறது. பல மகான்களும், அறிஞர்களும் அதற்கு விளக்கங்கள் எழுதியுள்ளார்கள்.

பஜ கோவிந்தத்தின் அறிவுரைகள், அதன் முதல் ஸ்லோகத்தில் கூறியுள்ளது போன்ற 'டுக்ரிஞ் கரணே' என்ற வியாகரணங்களையும் இலக்கியங் களையும், கற்று அறிந்த பண்டிதர் வாழ்ந்த அந்த காலத்திற்கும், விஞ்ஞான மேதைகள் நிறைந்த இந்த காலத்திற்கும், மற்றும் எந்த காலத் திற்கும், எல்லா மதத்தினருக்கும் இதன் அறிவுரைகள் பொருந்தக்கூடியதாக இருக்கிறது. ஆதலால், பஜ கோவிந்தம் ஒரு குறிப்பிட்ட மதத் தினருக்காகவோ அல்லது தனிப்பட்ட இனத் தினருக்காகவோ சொல்லப்பட்டது அல்ல. மனித சமுதாயம் முழுமைக்கும் அதன் கருத்துக்கள் வழி காட்டியாக விளங்குகின்றது.

'பஜ கோவிந்தம்' முதல் ஸ்லோகத்தில் கோவிந்தனை வழிபடுவதுதான் நமது வாழ்க்கையை பயனுள்ளதாக ஆக்குவதற்கு உற்ற ஒரே உபாயம் என்றும், மற்ற அறிவுகள் எதுவுமே முக்திக்கு வழி காட்டாது என்றும் கூறுகிறது. 31 ஸ்லோகங்கள் அடங்கிய பஜ கோவிந்தத்தில் இந்த முதல் ஸ்லோகம் மிகவும் முக்கியம் வாய்ந்தது. அதன் கருத்துக்களை நாம் அடிக்கடி சிந்திக்க வேண்டி

யிருக்கிறது. அதனால் பஜனைகளில் பாடுகிறவர்கள் ஒவ்வொரு ஸ்லோகத்தின் இறுதியிலும் இந்த முதல் ஸ்லோகத்தை பல்லவி மாதிரி பாடும்போது, மற்றவர்களும் அவர்களுடன் சேர்ந்து பாடுவது வழக்கமாக இருந்து வருகிறது.

பஜ கோவிந்தத்திற்கு மகுடம் போன்ற இந்த முதல் ஸ்லோகமும், அதற்கு அடுத்த 12 ஸ்லோகங்களும், ஸ்ரீபகவத் பாதர் அவர்கள் புண்ணிய பூமியாகிய காசிக்ஷேத்திரத்தில் தங்கியிருக்கும்பொழுது, பாடப்பட்டது. இந்த பன்னிரெண்டு ஸ்லோகங்களையும், 'துவாதச மஞ்சரிகா' என்று முதல் பாகத்தில் கூறப்பட்டிருக்கிறது. 'துவாதச மஞ்சரிகா' என்றால் 12 வகையான மலர்களால் தொடுக்கப்பட்ட கதம்பமாலை என்று பொருள். அடுத்த 14 ஸ்லோகங்களும், அது சமயம் ஆச்சாரியார் அவர்களுடன் இருந்த 14 சீடர்களால் பாடப்பட்டவை. அந்த 14 சீடர்களுடைய பெயர்களும், அவர்களால் இயற்றப்பட்ட பாடல்களும் ''சர்ப்பட பஞ்சரிகா'' என்னும் பெயரில் 2வது பாகத்தில் கூறப்பட்டிருக்கிறது. இறுதியாக, நான்கு ஸ்லோகங்களில் மீண்டும் பகவத் பாதர்கள் உலக க்ஷேமத்திற்காகவும், மக்களுக்கு ஆசி கூறியும், சுருக்கமான அறிவுரைகளுடன் பாடுகிறார்கள்.

பஜ கோவிந்தத்தின் முதல் பாடலில், ''கோவிந்தனை வழிபடு, கோவிந்தனை வழிபடு'' என்று கூறுகிறது. கோவிந்தன் என்றால், பசுக்களை காப்பவன் என்றும், உணர்ந்து கொள்ள முடியாதவன் என்றும் பொருள். அத்துடன் ஸ்ரீ சங்கர பாதர்கள் அவர்களுடைய குருவாகிய கோவிந்த பாதர்கள் அவர்களை குறிப்பதாகவும் கூறலாம்.

பஜ கோவிந்தம் என்றால், 'கோவிந்தனை பஜனை செய்' அல்லது 'இறைவனை வழிபடு' என்று பொருள்.

'இறைவனை வணங்குவது' என்றால், ''ஆலயங்களுக்குச் சென்று வழிபாடுகள் செய்வதையும், இறைவன் புகழைப் பேசுவதையும், பஜனைகள் பாடுவதையும், தியானத்தில் இருப்பதையும், பூஜைகள் செய்வதையும் முதலிய காரியங்களை, சம்பிரதாயமாகவும் சடங்குகளாகவும் செய்வது தான் இறைவழிபாடு'' என்று எண்ணிச் செய்து கொண்டு இருக்கிறோம். இந்த வழிபாடுகள் எல்லாம் இறைவனை உணருவதற்கு உற்ற உபாயங்களே அன்றி, இவைகளே 'இறைவழிபாடு' ஆகாது. அதனால்தான் பஜ கோவிந்தம் 7வது ஸ்லோகத்தில், ''இறைவனைப் பற்றி எவருமே எந்தப் பிராயத்திலும் சிந்தனை செய்வது இல்லை'' என்று பகவத்பாதர்கள் கூறுகிறார்கள். நாம் இறைவனை சர்வ வியாபியாக எங்கும் நிறைந்திருப்பதை உணர்ந்து, இறுதியாக நமக்கும் அந்தப் பரம்பொருளுக்கும் இடையே உள்ள பேரிணக்கத்தை கண்டு கொள்வது தான் உண்மையான இறை வணக்கம் ஆகும். இறைவனை உள்ளபடி அறிந்து கொள்ளும் அறிவையே 'ஞானம்' என்று கூறப்படுகிறது. மற்ற உலக அறிவுகளையெல்லாம் 'ஞானம்' என்று கூற முடியாது.

புராண புருஷராகிய வியாசபகவான் அவர்கள் ஞான திருஷ்டியினால் கண்டு எழுதியுள்ள ஸ்ரீமத் பாகவதத்தைப் போலவோ அல்லது மாணிக்க வாசகப் பெருமான் அருளிச் செய்த திருவாசகத்தைப் போலவோ 'பஜ கோவிந்தத்தை' ஒரு ''பக்தி நூல்'' என்று கூற முடியாது. பஜ கோவிந்தம் ஒரு வாழ்க்கை சாஸ்திரம். நமது வாழ்க்கையில் தினசரி நடைபெறும் சாதாரண நிகழ்ச்சிகளையே விளக்கிக் கூறி நமக்கு விழிப்புணர்வை உண்டாக்குகிறது. ''நமது வாழ்க்கை சாரமற்றது'' என்பதை நமக்கு உணர்த்துவது ''பஜ கோவிந்தம்''. இறை

வன் கருணையினால் பலகோடிப் பிறவிகளுக்குப் பிறகு நமக்கு கிடைத்திருக்கும் அரிய வாய்ப்பாகிய இந்த மானிட ஜென்மத்தை நன்கு புரிந்துகொண்டு இயற்கையின் நியதிகளை அனுசரித்து நடந்து கொண்டால், நாமும் வாழ்க்கையில் ஆனந்தத்தை யும், மேன்மையையும் அடைய முடியும்.

நமது வாழ்க்கையின் பிறவிப்பயனை அடைய, நம்மை சூழ்ந்திருக்கும் அஞ்ஞானங்களாகிய காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் முதலிய திரைகளை அகற்றி, மெய்ஞானத்தை உணர முயற்சி செய்யவேண்டும். அதுவே சிறந்த ஞான மாகும். மெய்ஞானத்தினால்தான், ஆன்மாவை உணரவும், வாழ்க்கையின் உன்னத நிலையான முக்தியை அடையவும் முடியும்.

இதே கருத்தை பகவான் சங்கரர் விவேகசூடா மணியில் 6வது ஸ்லோகத்தில் ''சாஸ்திரங்களை படிப்பதாலும், யாகங்கள் செய்வதாலும், தேவதை களை வழிபடுவதாலும் மட்டுமே முக்தி கிடைக்காது. 'ஆன்மா ஒன்று உண்டு' என்னும் அறிவின் விழிப்பு உணர்வு ஏற்படாமல் எத்தனை ஜென்மங்கள் எடுத் தாலும் முக்திநிலை கிட்டாது'' என்று கூறுகிறார்கள். ஆதலால் போலியான உலக வாழ்க்கையில் இருந்து மீளவும், உண்மைப் பொருளாகிய பரமாத்மாவை உள்ளபடி உணரவும், நமது பிறவிப் பிணியிலிருந்து 'விடுதலை' அல்லது 'முக்தி'யை அடைய மெய் ஞானமே உதவும்.

இதே கருத்தை, பகவத்கீதை 15வது அத்தியா யம், 19வது ஸ்லோகத்தில் 'எவனொருவன் மயக்கம் தீர்ந்தவனாய் என்னை உள்ளபடி அறிந்து உணரு கிறானோ, அவனே எல்லாம் அறிந்தவனாக என்னையே முற்றிலும் வணங்குகிறான்' என்று பகவான் கூறுகிறார்.

அதன்படி நாமும் பஜ கோவிந்தத்தின் கருத்துக்களையும், விளக்கங்களையும் நன்கு புரிந்து கொண்டு, விழிப்புணர்வுபெற்று நிலையற்ற உலக பந்தங்களிலிருந்து விடுதலை அடைந்து, நிலையான பேரின்பத்தை அடைய இறைவன் அருள் பாலிக்க பிரார்த்திக்கிறேன். வணக்கம்.

அன்புள்ள,

ஸ்வாமி ராதாகிருஷ்ண பாரதி.
(கே. ஆர். ராதாகிருஷ்ணன்)

## ஸ்ரீ சுவாமி சிவானந்தர் அருள்வாக்கு

உன் சொந்த விதிக்கு நீயே தலைவன்.
உன் அதிர்ஷ்டத்தை உருவாக்கும் சிற்பியும் நீயே!
உனது துன்பங்களுக்கும் நீயே பொறுப்பாளி.
உனது கவலைகளுக்கு காரணம் உனது செயல்களே.
உனது வேதனைகள் உன்னால் உண்டாக்கப்
பட்டவைகளே!

ஒவ்வொரு செயலும் விரைவிலோ, அல்லது தாமதித்தோ அதன் பலனைக் கொடுக்கும். புண்ணியச் செயல்களால் இன்பமும், தீய செயல்களால் துன்பமும் ஏற்படுவதை எவராலும் தடுக்க முடியாது.

# பஜ கோவிந்தம்

## ஸ்லோகம்—1.

கோவிந்தனை பஜனை செய்

பஜ கோவிந்தம் பஜ கோவிந்தம்
கோவிந்தம் பஜ மூடமதே
ஸம்ப்ராப்தே ஸந்நிஹிதே காலே
நஹி நஹி ரக்ஷதி டுக்ருஞ்கரணே

கருத்துரை :—

ஓ! மூடனே, இறைவனுக்கு எப்பொழுதும் மனத்தாலும், வாக்காலும், உடலாலும் பணிபுரிவதை விட்டு, 'டுக் ருஞ்கரணே' போன்ற இலக்கணச் சொற்களைப் பயில்வதால் பயனில்லை. அது இறுதிக் காலத்தில் உன்னைக் காப்பாற்ருது. ஆகவே, கோவிந்தனையே உன் மனே வாக்கு காயங்களால் எப்பொழுதும் பஜனம் செய்துகொண்டிரு.

விளக்கவுரை :—

இந்த முதல் ஸ்லோகம் நமது சிந்தனையை தூண்டுவதாக அமைந்திருக்கிறது. அதாவது நமது பிறவியின் நோக்கம் என்ன என்பதையும், நாம் எங்கிருந்து வந்து இங்கு பிறந்திருக்கிருேம் என்பதையும், நமது வாழ்க்கையின் இறுதி நிலை என்ன என்பதையும் ஒவ்வொருவரும் நன்கு சிந்திக்க வேண்டும். அத்துடன், உலகில் பிறந்துள்ள அனைவருக்கும் வாழ்க்கையில் ஒரு நாள் முடிவு ஏற்படும் என்பதையும் எப்போதும் நினைவில் கொண்டு செயலாற்ற வேண்டும் என்பதை நமக்கு விளக்குகிறது.

ஒரு மனிதன் சென்னையிலிருந்து பம்பாய் செல்ல காரில் வீட்டைவிட்டுப் புறப்பட்டு பல பாதைகள் பிரியும் ஒரு சந்திப்பில் வந்து அங்குள்ள கைகாட்டியைப் பார்த்து, அது காட்டும் திசையில் சென்று பம்பாயை அடையவேண்டும்.

அதே மாதிரி முக்தியை அடைய விரும்புகிறவர்கள், வேதங்கள் உபநிஷதங்கள் போன்ற நூல்களைக் கற்று, அறிந்து அதன்வழி நடந்து பயனடைய வேண்டும்.

அதை விட்டு அந்த மனிதன் பம்பாய் செல்லும் மார்க்கத்தை காட்டும் கைகாட்டி மரத்தின் அடியில் உட்கார்ந்து கொண்டால் எந்தவிதமான பயனும் ஏற்படாது.

அதே மாதிரி தெய்வீக நூல்களைக் கற்று அறிந்து கொள்ளுவதால் மட்டுமே முக்தி கிடைக்காது என்று பகவத்பாதர்கள் கூறுகிறார்கள்.

மனித வாழ்க்கை பயனுள்ளதாகவும், சிறப்பாகவும் அமைந்து, அதன் இறுதி லட்சியமான முக்தியை அடையவும் வழிகாட்டும் அறிவையே 'ஞானம்' என்று கூறப்படுகிறது.

'வாழ்க்கையை அமைதியாகவும், பயனுள்ளதாகவும் வாழ்ந்து, இறுதி காலத்திலும்கூட இறைவனை நினைத்துக்கொண்டே மரிப்பவர்கள் மீண்டும் இவ்வுலகில் பிறப்பதில்லை' என்று கீதையில் பகவான் கூறுகிறார்.

அம்மாதிரி, பயனுள்ள வாழ்க்கையை வாழ்வதற்கு வழிகாட்டும் அறிவுதான் உண்மையான 'ஞானம்' என்றும், மற்ற உலக அறிவுகள் எல்லாம் வயிற்றுப்பிழைப்புக்கு ஓரளவு உதவுமே அன்றி, உண்மைப்பொருளை உணரவும், நமது வாழ்க்கையின்

குறிக்கோளை அடையவும் உதவாது என்றும் இந்த முதல் ஸ்லோகம் கூறுகிறது. இதை விளக்க ஒரு சிறு சம்பவத்தைக் கூற விரும்புகிறேன்.

ஒரு நாள் மாலை மூன்று பண்டிதர்கள் கங்கை நதியை கடக்க அதன் கரைக்கு வந்து ஒரு பரிசிலில் ஏறி ஆற்றைக் கடந்துகொண்டிருக்கும்போது கர்வம் மிக்க அந்த பண்டிதர்களில் ஒருவர் பரிசில் ஓட்டு பவனைப் பார்த்து, தம்பீ! உனக்கு தர்க்க சாஸ் திரம் தெரியுமா? என்று கேட்டார். பரிசில்காரன் தனக்கு தர்க்க சாஸ்திரத்தைப்பற்றி ஒன்றுமே தெரியாது என்று கூறினான். அதற்கு அந்த பண்டிதர் 'தர்க்க சாஸ்திரம் தெரியவில்லையானால், உனது வாழ்நாளில் கால்பாகம் வீணாகப்போயிற்று' என்று கூறினார். அதன் பிறகு அவனிடம் அடுத்த பண்டிதர், 'அப்படியானால், கணித சாஸ்திரமாவது தெரியுமா?' என்று கேட்டார் அதற்கு அந்த பரிசில் காரன் "ஐயா நான் பள்ளிக்கே சென்றதில்லை. ஆதலால் கணித சாஸ்திரம் என்றால் என்னவென்றே எனக்குத் தெரியாது" என்று கூறினான். அப்படி யானால் உன்னுடைய வாழ்க்கையில் இன்னும் கால் பாகம் வீணாகப் போயிற்று என்று அந்த அடுத்த பண்டிதர் கூறினார். அப்போது மூன்றாவது பண்டிதர் அவனைப் பார்த்து "உனக்கு வான சாஸ்திரமாவது தெரியுமா" என்று கேட்டார். அவன் அதுவும் தெரியாது என்று சொன்னபோது, அவனுடைய வாழ்க்கையில் முக்கால் பாகம் வீணாகப் போய் விட்டதே என்று கூறி மூன்று பண்டிதர்களும் அவனைப் பார்த்து பரிகாசம் பண்ணினார்கள்.

சற்று நேரத்திற்கெல்லாம் வானம் இருண்டு, கருமேகங்கள் சூழ்ந்து பெரும் காற்றுடன் மழை பெய்யத் தொடங்கிற்று. அதுசமயம் அவர்கள் சென்றுகொண்டிருந்த பரிசில் நடு ஆற்றைக் கடந்து

கொண்டிருந்தது. காற்றின் வேகத்தினுல், பரிசில் ஆட ஆரம்பித்தது. பரிசில் ஓட்டுபவன் எவ்வளவு முயன்றும் பரிசிலைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அதனுல், அவன் அந்த மூன்று பண்டிதர்களையும் பார்த்து 'ஐயன்மீர், இன்னும் சிறிது நேரத்தில் பரிசில் கவிழ்ந்துவிடும் அபாயத்தில் இருக்கிறது. அப்படி ஒரு வேளை பரிசில் கவிழ்ந்துவிட்டால், உங்களுக்கு நீந்தத் தெரியுமா' என்று கேட்டான். அப்போது அந்த பண்டிதர்களின் கர்வம் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது. அவர்கள் மூவரும் பயந்து நடுங்கும் குரலில், தங்களுக்கு நீந்தத் தெரியாது என்று கூறினுர்கள். 'அப்படியானுல் நீங்கள் கற்ற வித்தைகள் எல்லாம் இப்போது பயனற்றுப் போய்விட்டது, அதனுல் உங்களுடைய வாழ்க்கை முழுவதும் வீணுகப் போய்விட்டது' என்று கூறி பரிசில்காரன் ஆற்றில் குதித்து, நீந்தி கரை சேர்ந்தான். மூன்று பண்டிதர்களும் பரிசிலுடன் ஆற்றில் அடித்துச் செல்லப்பட்டு, மூழ்கி மடிந்தனர். அவர்கள் கற்ற வித்தைகள், அவர்களுடைய உயிரைக் காப்பாற்ற உதவவில்லை.

இதே கருத்தைத்தான் இந்த முதல் ஸ்லோகத்தில், 'நமது வாழ்க்கையில், நாம் கற்றுத் தெரிந்து கொள்ளவேண்டிய, இயற்கையின் நியதிகள்தான் நம்மை வாழ வைக்கும் என்றும், மற்ற அறிவுகளால் பயனில்லை என்றும் கூறுகிறது.

அதன்படி நாமும், ஆரோக்கியமாகவும், அமைதியாகவும் வாழ்ந்து, உண்மைப்பொருளாகிய இறைவனையும், நமக்குள் இருக்கும் அழியாப் பொருளாகிய ஆன்மாவையும் உணர முயற்சி செய்ய வேண்டும். அதுவே உண்மையான ஞானம். மற்ற அறிவுகளால் வாழ்க்கையின் குறிக்கோளை அடைய முடியாது என்று இந்த முதல் ஸ்லோகம் கூறுகிறது.

---

**ஸ்லோகம்–2.**

## 2. ஆசையும் தேவையும்

மூட ஜஹீஹி தனுகம-த்ருஷ்ணும்
குருஸத்புத்திம் மனஸி வித்ருஷ்ணும்
யல்லபஸே நிஜகர்மோபாத்தம்
வித்தம் தேந விநோதய சித்தம்

**ருத் ரை :—**

*விவேகமற்றவனே ! பொருள் வரவேண்டும் என்ற பேராசையை ஒழித்துவிடு. மனதில் பேராசை யில்லாத நல்ல புத்தியை நாடு. உனக்கு உரித்தான கருமத்தால் எந்தப் பொருளை அடைகிருயோ அதனுல் சித்தத்தை இன்புறச் செய்வாயாக.*

**விளக்கவுரை :—**

மக்களுடைய கஷ்டங்களுக்கும், அழிவுகளுக்கும், காரணமாக இருப்பது அவர்களுடைய ஆசையே ஆகும் ஆசைகளில் குறிப்பாக மண்ணுசை, பொன்னுசை, பெண்ணுசை ஆகிய மூன்று ஆசைகளை கூறுவது உண்டு. மண்ணுசையினுல் அழிந்த அரசர் களின் வரலாற்றை கூறுவதுதான் அமரகாவியமான ''மகாபாரதம்'' அதே மாதிரி பெண்ணுசையினுல் அழிந்த அரசனின் கதைதான் ''இராமாயணம்''.

இதே கருத்தை பகவத்கீதை 2வது அத்தியா யம், 62வது ஸ்லோகத்தில், 'மனிதன் புறப் பொருள்களைப்பற்றி சிந்திக்கும்போது அவற்றின் மீது பற்று உண்டாகிறது. பிறகு அந்த பொருளை அடையவேண்டும் என்னும் ஆசை எழுகிறது. அந்த ஆசைகள் நிறைவேருதபோது அதற்கு தடையாக

இருந்தவர்மீது கோபம் உண்டாகிறது! என்று கூறுவதுடன் அடுத்த 63வது ஸ்லோகத்தில் 'ஒரு மனிதனுக்கு கோபம் உண்டாகும் போது, நினைவு குழப்பம் ஏற்பட்டு, நிலைதடுமாறி, அதனால் அவனுடைய பகுத்தறிவு நாசமுற்று, இறுதியில் அவனும் அழிந்துவிடுகிறான்' என்று அழகாக விளக்குகிறது.

இம்மாதிரி அழிவிலிருந்து நம்மை காப்பாற்றிக் கொள்ளும் உபாயத்தையும் கீதை கூறுகிறது. இரண்டாவது அத்தியாயம், 45வது ஸ்லோகத்தில், ''சுகம், துக்கம் ஆகிய இருமைகளை நீக்கி, ஒரு பொருளை அடைய வேண்டும் என்ற ஆசையையும், அடைந்த பொருளை பாதுகாக்க வேண்டும் என்ற எண்ணத்தையும் விட்டு, நீ உன்னிடத்திலேயே திருப்தி உள்ளவனாக நிலைபெற்றிரு'' என்று கூறுகிறது.

'போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து' என்னும் முதுமொழிக்கிணங்க எவன் ஒருவன் பிறருடைய வாழ்க்கையை கண்டுபொறாமை படாயலும், பிறருடைய பொருளுக்கு ஆசை படாமலும், தன்னிடம் உள்ள பொருள்களிலும், வசதிகளிலும், அவனுடைய வாழ்க்கை முறையை அமைத்துக்கொண்டு, இன்புற்றிருக்கிறானோ, அவனே வாழ்க்கையில், நிம்மதியையும், சந்தோஷத்தையும் அடைய முடியும்.

'அறுமின், அறுமின் ஆசை அறுமின்,
ஈசனோடாகினும், ஆசை அறுமின்'

என்பது பெரியோர் வாக்கு.

இந்த உலகில் நாம் அமைதியாகவும் சுகமாகவும் வாழ, நமது அடிப்படைத் தேவைகள் பூர்த்தி செய்யப்படவேண்டியது அவசியமாக இருக்

கிறது. நமது அடிப்படைத் தேவைகள் மிகவும் சொற்பமே. ஆனால் நம்முடைய தேவைகள் பூர்த்தி செய்யப்பட்டபோதிலும் நாம் மனநிறைவு அடையாமல் கற்பனையான நமது ஆசைகளும், நிறைவேற்ற முடியாத கனவுகளும், நிறைவேற வேண்டும் என்று எதிர்பார்த்து, இறுதியில் ஏமாற்றமே அடைகிறோம். நமது மனதில் எழும் ஆசைகளை ஒரு போதும் நிறைவு செய்ய முடியாது. ஏனெனில், ஒரு ஆசை நிறைவேறினால், அடுத்த கணமே, மற்றொரு பெரிய ஆசை தயாராக காத்துக்கொண்டிருக்கிறது. நமது ஆசைகளுக்கு, எல்லையோ, முடிவோ கிடையாது. ஆதலால், நமது ஆசைகளை நிறைவு செய்து திருப்தி அடைவது இயலாத காரியம்.

ஆசையுள்ள மனம், ஒரு ஓட்டைப் பாத்திரம் போன்றது. அதில் எவ்வளவு தண்ணீர் ஊற்றினாலும், நிரம்பாது. அதிலும் அடிபாகத்தில் ஓட்டையுள்ள பாத்திரமாக இருந்தால், அதில் துளிகூட தண்ணீர் தங்காது. அதே மாதிரி மனம் என்னும் பாத்திரத்தில், ஆசையென்னும் ஓட்டை இருக்கும்வரை 'நிறைவு' என்னும் திருப்தி ஏற்படுவதில்லை அந்த வாழ்வு எப்பொழுதும் நரகமாகத் தான் இருக்கும்.

ஆதலால், நமது மனதில் தோன்றும் போட்டி மனப்பான்மை நிறைந்த ஆசைகளை ஒழித்தால், கோபம், பொறாமை, வெறுப்பு, வன்முறை முதலிய தீய சக்திகளை தலையெடுக்க வொட்டாமல் செய்து விடலாம். அத்துடன் நம்மிடம் இல்லாதவற்றை நினைத்து குறைகூறி வாழ்வதைவிட, வாழ்க்கையில் நம்மைவிட கஷ்டப்படுகிறவர்களைப் பார்த்து, ஆறுதல் அடைந்து, நம்மிடம் இருக்கும் பொருள்களிலும் வசதிகளிலும் திருப்திகொண்டு, அதற்கு

தக்கபடி நமது வாழ்க்கை முறையை அமைத்துக் கொண்டால் நாமும் எப்போதும் அமைதியாகவும், சந்தோஷமாகவும் வாழமுடியும் என்று இந்த இரண்டாவது ஸ்லோகம் அறிவுறுத்துகிறது.

**ஆசை**

ஆசைகளை நிறைவேற்றிக்கொள்ளவே நாம் உலகில் பிறந்திருக்கிறோம். ஆசைகளால் தூண்டப் பெற்று எல்லா காரியங்களையும் செய்து வருகிறோம். உற்றார் பலர் நமக்கு உண்டானது ஆசையின் பலனே. ஆசையினால் நாம் நமக்கு எல்லை கட்டிக்கொண்டோம். கடலில் நீந்தி விளையாடும் மீன் ஒரு சிறு தொட்டிக்குள் கட்டுண்டு இருப்பதுபோல் ஆசைக்குள் நாம் கட்டுண்டு இருக்கிறோம். ஆசையை அகற்றினால் உலகம் அனைத்தும் நமக்கு சொந்தம் என்பது விளங்கும்.

— ''தினசரி தியானம்''

## ஸ்லோகம்—3.

## 3. பெண்ணுசை

நாரீஸ்தனபர-நாபீதேசம்
த்ருஷ்ட்வா மா கா மோஹாவேசம்
ஏதன்மாம்ஸ-வஸாதி-விகாரம்
மனஸி விசிந்தய வாரம் வாரம்

**ருத்துரை :—**

ஒரு பெண்ணின் ஸ்தனங்கள் இடைப்பகுதி முதலியவைகளை பார்த்து மதிமயங்கி ஆவேசம் அடையாதே. இவைகளும் மாமிசம், கொழுப்பு, எலும்பு, தோல் ஆகியவைகளால் உண்டாக்கப் பட்ட வேறுமாதிரி உருவங்களே என்பதை அடிக்கடி மனதில் எண்ணிக்கொள்.

**விளக்கவுரை :—**

மனிதனுடைய ஆசைகளில் மண்ணுசையும், பொன்னுசையும் செயற்கையாக மனிதனுல் உண்டாக்கப்பட்டது. அது இயற்கையானதல்ல. ஆனுல், பெண்ணுசை அவனுடனேயே பிறந்த பிரிக்க முடியாத குணங்களில் ஒன்ருக இறைவனுல் கொடுக்கப்பட்டது அது பிரஜா உற்பத்திக்கு ஆதாரமாகவும், உலகம் தொடர்ந்து இயங்கவும், இயற்கையாகவே அமைந்துள்ள ஒரு தெய்வீக சம்பத்து. அதன் காரணமாகவே ஆண், பெண் என இருபாலாரையும் இயற்கை உண்டாக்கி, அவர்கள் ஆனந்தத்தை அடையும் பொருட்டு, அவர்களுக்குள் ஓர் ஈர்ப்பு சக்தியையும் ஏற்படுத்தி யிருக்கிறது. அதன் சிறப்பை உணர்ந்து வாழ்க்கை

யில் அதன் பயனை அனுபவித்து மகிழாமல் நமது மதியீனத்தினால், அந்த ஈர்ப்பு சக்தியை தவறாக பயன்படுத்தி, கீழ்த்தரமான கவர்ச்சிகளில் மயங்கி கஷ்டங்களை அனுபவிக்கிறோம்.

நாம் இந்த உலகில் கண்டு மகிழ இயற்கை நமக்கு அநேக வசதிகளை செய்து கொடுத்திருக்கிறது. தினசரி காலையில் சூரியன் உதிக்கும்போதும் மாலையில் மறையும் போதும் ஏற்படுத்தும் அற்புத காட்சிகளை தினசரி நமது வாழ்நாள் முழுவதும் பார்த்து பரவசம் அடையலாம்.

அதே மாதிரி, காணத்தெவிட்டாத இயற்கையின் மலைக்காட்சிகளும், அலைபாயும் கடற்கரைகளும் நமது மனதிற்கு அமைதியை உண்டாக்குகிறது. நமது மழலை செல்வங்களின் கபடமற்ற சிரிப்பும், புள்ளினங்கள் செய்யும் தெய்வீக கானங்களும், நமது செவிகளுக்கு இன்பமூட்டுகிறது. வானில் தெரியும் வானவில்லும், இந்திர ஜால வித்தைகள் புரியும் மேககூட்டங்களும், இரவில் தோன்றும் நட்சத்திரங்களும் அவைகளின் தலைவனாக விளங்கும் சந்திரனின் வளர்ச்சியும், தேய்வும், அழகிய பூந்தோட்டங்களில் உலவி வரும் வண்ணத்துப் பூச்சிகளும், மலைச்சாரலில் துள்ளிக் குதித்து தாவி ஓடும் அருவிகளும், அவற்றின் நீர் வீழ்ச்சிகளும் நமது கண்களுக்கு பெருவிருந்தாக அமைந்திருக்கிறது. இது மாதிரி, இன்னும் ஏராளமான பரிசுகளை இறைவன் நமக்காக படைத்திருந்தாலும் நாம் அவைகளை அனுபவித்து மகிழாமல், நமது அறியாமையினால், போலியானதும், நிலையற்றதும், நமக்கு அழிவை உண்டாக்கும் அநேக காரியங்களை செய்து கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறோம்.

நமது ஐம்புலன்களாகிய கண், காது, மூக்கு, வாய், ஸ்பரிசம் முதலிய ஐந்து உணர்வுகளால்தான் நாம் வெளி உலகுடன் தொடர்பு கொள்ளவும் அதில் நடைபெறும் நிகழ்ச்சிகளை அறிந்து கொள்ளவும் முடிகிறது.

நமது புலன்களுக்கு இயற்கையாகவே அநேக பலவீனங்கள் உண்டு ஆதலால், நமது புலன்களை, முறையாக அடக்கி, ஆள பழகவேண்டும். இல்லாவிடில், ஆபத்து நேரிடும்.

சுவையை நாடிச் செல்லும் மீன் தூண்டிலில் மாட்டிக்கொள்ளுகிறது. விளக்கினுல் கவரப்பட்ட விட்டில் பூச்சி, அதில் விழுந்து மடிகிறது. பெண் யானையின் ஸ்பரிசத்தை நாடிச்செல்லும் ஆண் யானை மனிதனிடம் பிடிபடுகிறது. ஓசைக்கு அடிமையாகும் மான், வேடனின் வலையில் சிக்கிக் கொள்கிறது. மணத்தை நாடிச் செல்லும் வண்டு, மலரில் அகப்படுகிறது. அப்படியிருக்க, இந்த ஐம் பொறிகளையும், நம்பி ஓடும் மனிதனின் கதி என்ன ஆவது ? ஆதலால், நமது புலன்களை அடக்கி ஆள வேண்டும்.

நம்மிடம் உள்ள குறைகளில் தலைசிறந்த பலவீனமாகிய பெண்ணுசையினுல் அழிந்தவர்கள் ஏராளம். ஆதலால், நாமும் அம்மாதிரி கஷ்டப் பட்டு அழிந்துபோகாமல் இருக்கவேண்டும் என்று இந்த 35-வது ஸ்லோகம் நம்மை எச்சரிக்கிறது.

இதே கருத்தை, அருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க சுவாமிகள், 'மருவு பெண்ணுசையை

மறக்கவே வேண்டும்' என்று திருஅருட்பாவில் அழுத்தமாக கூறியிருக்கிறார்கள்.

அத்துடன் குறள் ஆசிரியர் அவர்களும்
''மலரினும் மெல்லியது காமம்
சிலரதன் செவ்வி தலைப்படுவார்''
என்று கூறுகிறார்கள்.

**வாசனையின் வேகம்**

சாதுக்கள் சிலர் தியானம் பயின்றுகொண்டிருந்தபொழுது இளம் மங்கை ஒருத்தி அவ்வழியே போய்க்கொண்டு இருந்தாள். சாதுக்களுள் ஒருவர் மட்டும் இலேசாகக் கண்ணெடுத்து அவளைப் பார்த்தார். அவர் சாது ஆவதற்கு முன்பு கிரகஸ்த ஆச்ரமத்தில் மூன்று மக்களைப் பெற்றெடுத்தவர். வாசனையின் வேகம் அத்தகையது.

— பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர்.

## ஸ்லோகம்–4.

## நிலையற்ற வாழ்க்கை!

---

நளினீ-தலகத-ஜல-மதிதரலம்
 தத்வஜ்-ஜீவித-மதிசயசபலம்
வித்தி வ்யாத்யபிமான-க்ரஸ்தம்
 லோகம் சோகஹதஞ்ச ஸமஸ்தம்

**கருத்துரை :—**

தாமரை இலைமீது ஒட்டாமல், அசைந்தோடிக் கொண்டிருக்கும் நீர்போல மனித வாழ்க்கை நிலையற்றது. உலகில் எங்கு பார்த்தாலும் நோயும், செருக்கும்தான் காணப்படுகிறது. எவனும் தான் சுகமாக இருப்பதாக நினைப்பதில்லை. எனவே, நிலையற்ற இந்த உலக வாழ்க்கைக்காக, வீணுக அலையாதே.

**விளக்கவுரை :—**

''இன்றைக்கு இருந்தாரை நாளைக்கு இருப்பர் என்று எண்ணவோ திடமில்லை'' என்று தாயுமானவ சுவாமிகள் பாடியிருக்கிறுர்கள். இந்த உலக வாழ்க்கை நிலையற்றது. 'உலகில் பிறந்துள்ள ஜீவன்கள் அனைத்தும் ஒருநாள் மடிய வேண்டியது திண்ணம்' என்பது எல்லோரும் அறிந்த உண்மை.

மனித வாழ்க்கையில் சுகத்தைவிட துக்கமும், கஷ்டமும்தான் அதிகமாக இருக்கிறது. அதுவும், முதுமை காலத்தில் நமது வாழ்க்கை பரிதாபத்துக் குரியதாக ஆகிவிடுகிறது. அப்படியிருந்தும் எவரும் இந்தத் துன்பகரமான வாழ்க்கையில் இருந்து விடுதலை அடைய விரும்புவதில்லை. நிலையற்ற உலக

வாழ்க்கையையும், சுருங்கிப்போன உடலேயும் பற்றிக்கொண்டிருக்கவே ஆசைப் படுகிருர்கள்.

''இந்த பந்தமே நமக்கு மீண்டும், மீண்டும் பிறவியை உண்டாக்குகிறது'' என்று கீதையில் பகவான் கூறுகிருர்.

அற்ப சுகங்களுக்காகவே நாம் இந்த உலக வாழ்க்கையில் ஒட்டிக்கொண்டிருக்க ஆசைப்படு கிருேம் என்பதை விளக்க ஒரு சிறு கதையைக் கூற விரும்புகிறேன் :-

ஒருநாள், ஒரு மனிதன் காட்டு மார்க்கமாக நடந்துபோய்க்கொண்டிருக்கும்போது, திடீர் என்று ஒரு புதரிலிருந்து ஒரு சிங்கம் பாய்ந்து வந்து அவனே துரத்த ஆரம்பித்தது. அப்போது அந்த மனிதன் பக்கத்தில் இருந்த ஒரு மரத்தின்மீது ஏறிக்கொண் டான். அந்த சிங்கம் அவனேப் பார்த்து உறுமிக் கொண்டே அந்த மரத்தடியில் உட்கார்ந்திருந்தது. அது சமயம் அந்த மரத்தின் மற்ருெரு கிளே யிலிருந்து, ஒரு பெரிய பாம்பு அவனே நோக்கி வந்து கொண்டிருந்தது. அதனுல் அவன் பிடித்திருந்த கிளேயைவிட்டு மற்ருெரு கிளேக்குத் தாவினுன். அந்த கிளே அவனுடைய பாரத்தை தாங்காமல் உடைந்து தொங்க ஆரம்பித்தது. அவன் எந்த நிமிஷமும் கீழே விழுந்துவிடும் அபாயத்தில் இருந் தான். அப்போது அவன் கீழே குதிக்க முடியுமா என்று பார்த்தபோது, கீழே ஒரு பாழும் கிணற்றை யும், அதற்குள் ஒரு பெரிய முதலே வாயை திறந்து கொண்டு அவனே விழுங்கத் தயாராக காத்துக் கொண்டிருப்பதையும் அந்த கிளேயில் தொங்கிக் கொண்டே கவனித்தான். அத்துடன் இரண்டு எலி களும் அந்த கிளையை கடிக்க ஆரம்பித்தது.

இவ்வளவு ஆபத்துக்களுக்கிடையே, அவனுடைய உயிர் ஊசலாடிக்கொண்டிருக்கும் வேளையில், அவன் பிடித்திருந்த கிளையிலிருந்து ஒரு தேன் கூடு கலைக்கப்பட்டு அதிலிருந்து சிதறிய ஒரு சில தேன் துளிகள், அவனுடைய உதடுகளின் மீது விழுந்தது. அப்போது அந்த மனிதன் தன்னுடைய ஆபத்துக்களையெல்லாம் மறந்து அந்த தேன் துளிகளை நாக்கினால் நக்கி, ரசித்து சுவைக்க ஆரம்பித்தான்.

நமது வாழ்க்கையும், இம்மாதிரி அநேக கஷ்டங்களும், ஆபத்துக்களும் நிறைந்ததாக இருந்தாலும், நாம் அவைகளை மறந்து தேன் துளிகளைப்போல, அவ்வப்போது நமக்கு ஏற்படும் அற்ப சுகங்களுக்கு ஆசைப்பட்டு, வாழ்க்கையில் ஒட்டிக்கொண்டிருக்கவே விரும்புகிறோம் என்பதை இந்த கதை அழகாக விளக்குகிறது.

நிலையற்ற உலக விஷயங்களை உள்ளத்திலிருந்து நீக்கும் அளவுக்கு நமக்கு நிலையாக உள்ள பேருண்மை நன்கு விளங்குகிறது. 'நமது உடல் ஒருநாள் அழிந்து போகக்கூடியது' என்பதை அடிக்கடி நினைவில் கொண்டு, அதன்மீது அதிக பற்று வைக்காமல் வாழ பழகிக்கொள்ள வேண்டும் என்பதை இந்த நான்காவது ஸ்லோகம் விளக்கிக்கூறுகிறது.



## ஸ்லோகம்—5.

# தனித்திரு

யாவத்வித்தோபார்ஜன-ஸக்தஸ்-
தாவந்நிஜபரிவாரோ ரக்தஹ
பச்சாஜ்ஜீவதி ஜர்ஜரதேஹே
வார்த்தாம் கோऽபி நப்ருச்சதி கேஹே

**கருத்துரை :—**

ஒருவன் பணம் சம்பாதிக்கும் வரையில்தான் மனைவி, மக்கள் எல்லோரும் அவனிடம் அன்பாகப் பழகிப் பணிவிடை செய்வார்கள். அவன் கிழத் தனத்தால் உடல் தளர்ந்து பணம் சம்பாதிக்காமல் வீட்டில் தங்கிவிட்டானுனல், வீட்டில் யாரும் அவனிடம் பேசவும் மாட்டார்கள். எனவே, பணத்திற்காகத்தான் உன் சுற்றத்தார் உன்னைச் சுற்றி வருகிறுர்கள் என்பதை உணர்ந்துகொள்.

**விளக்கவுரை :—**

'உடன் பிறந்தார் சுற்றத்தார் என்று
இருக்க வேண்டா
உடன் பிறந்தே கொல்லும் வியாதி-
உடன் பிறவா
மாமலையில் உள்ள மருந்தே பிணி தீர்க்கும்
அம்மருந்து போல்வாரும் உண்டு?

என்பது ஔவையார் வாக்கு.

நாம் இந்த உலகில் பிறக்கும்போது தனியாகத் தான் பிறக்கிறேம். அதே மாதிரி இந்த உலகை

விட்டு போகும்போதும் தனியாகவே போகவேண்டி யிருக்கிறது. நமது உறவு, பந்தம், நட்பு எல்லாம் தற்காலிகமாக இடையில் ஏற்பட்டவைகளே ஆகும்.

வாழ்க்கையில் நாம் பிறருக்கு உதவியாகவோ, அல்லது உபயோகமாகவோ இருக்கும்வரையில்தான் நமது பந்துக்களும், நண்பர்களும் நம்மை புகழ்ந்து பாராட்டி நம்மிடம் உறவு கொள்ளுவார்கள். ''நம்மால் அவர்களுக்கு எந்தவிதமான பலனும் இல்லை'' என்று ஏற்படும்போது, அவர்கள் நம்மை விட்டு விலகிவிடுவதுடன், நம்மை சிறிதும் மதிக்கவும் மாட்டார்கள்.

நமது குழந்தைகளை கண்ணுக்குள் கண்ணாக பாவித்து, கண்களை இமைகள் காப்பதுபோல் காத்து, வளர்த்து, பல தியாகங்களையும் செய்து அவர்களுக்கு வேண்டிய வசதிகளையெல்லாம் நமது சக்திக்கும் அதிகமாகவே செய்து, அவர்களை ஆளாக்குகிறோம். அவர்கள் நமது முதுமையில் நமக்கு உதவுவார்கள் என எதிர்பார்க்கிறோம். ஆனால் அவர்கள், நமது தள்ளாத வயதில் நமது நலனில் சிறிதும் அக்கரையின்றி உதாசீனம் செய்யும் போது நமக்கு பெரும் ஏமாற்றமே ஏற்படுகிறது.

ஆதலால், நாம் நமது வாழ்நாளில் திடகாத் திரர்களாக இருக்கும்போதே எந்த நபரிடமும், எந்தவிதமான விருப்போ, வெறுப்போ, பற்று தலோ இல்லாமல் வாழ பழகிக்கொள்ளவேண்டும். எவரிடமிருந்தும் எதையும் எதிர்பார்க்காமல் 'தன் கையே தனக்குதவி' என்னும் அடிப்படையில், தனியர்களாக வாழவேண்டும். எதிர்பார்ப்பினால் ஏமாற்றமும், விருப்பு வெறுப்புகளினால் பந்தமும் ஏற்படுகிறது. அதனால் ஏற்படும் விளைவுகள்

கஷ்டத்தை உண்டாக்குகிறது. அதனுல்தான் வள்ளலார் இராமலிங்க சுவாமிகள், 'தனித்திரு' என்று கூறுகிருர்கள்.

'தனித்திரு' என்ருல் சமுதாயத்தை விட்டு விலகி, ஏகாந்தமாக இருப்பது என்பது அர்த்த மல்ல. சமுதாயத்தை விட்டு விலகி இருப்பது எவருக்கும் சாத்தியமல்ல. ஏனெனில், நாம் எங்கு சென்ருலும் நம்மைச் சுற்றி ஒரு சமுதாயம் அமைந்துவிடும். ஆதலால், நாம் எந்தவிதமான சூழ்நிலையில் இருந்தாலும் நாம் 'தனியர்கள்' என்னும் விழிப்புணர்வுடன் இருந்து சமுதாயத் துடன் ஒட்டாமல் வாழ பழகிக்கொள்ள வேண்டும்.

தாமரை இலே தண்ணீரிலேயே இருந்தாலும் அதன்மீது ஒருதுளி தண்ணீர்கூட ஒட்டுவதில்லே. ஆனுல் தாமரை தண்ணீரிலேதான் வளர வேண்டி யிருக்கிறது. அதேமாதிரி, நாமும் உலகத்தில் வாழ்ந்தாலும், உலகத்துடன் ஒட்டாமல் வாழ வேண்டும்.

'படகு தண்ணீரில் போகலாம், ஆனுல் படகுக் குள் தண்ணீர் வந்துவிடக்கூடாது' என்று பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் அடிக்கடி கூறுவதுண்டு.

நமக்கு வழிகாட்டிகளாக வாழ்ந்த மகான் களும், அறிஞர்களும் காட்டியிருக்கும் மார்க்கங் களே ஒட்டி வாழ்ந்து நமது வாழ்க்கை பாதையை நன்கு அமைத்துக்கொள்ள வேண்டும். நமது வாழ்க் கையை நாமாகவேதான் வாழ்ந்து கடக்க வேண்டி யிருக்கிறது. எந்த சமயத்திலும், எவரையும் சார்ந்து வாழக்கூடாது.

நமது எதிர்காலத்தைப் பற்றிய கனவுகளும், கற்பனையான நமது ஆசைகளும், மற்றவர்களை சார்ந்து இருத்தல் முதலிய எண்ணங்களே, நாம் தனியாக இருக்க பயப்படுவதற்கு காரணம். நாம் தனித்திருந்து வாழ பழகிக்கொண்டால், நமக்கு தனிமையில் ஏற்படும் அச்சம் அழிந்து, **விழிப் புணர்வு** உண்டாகும்.

மனத்தகத்துள்ள நலம், கேடு இரண்டையும் தெரிந்துகொள்ளுவதற்கு ஏகாந்தம் பயன்படுகிறது. சிலருக்கு 'ஏகாந்தம்' அச்சத்தை ஏற்படுத்துகிறது. வேறு சிலர் ஏகாந்தத்தில் இனிமை காண்கின்றனர். ஏகாந்தத்தில் இனிது வீற்றிருக்க தெரிந்துகொண்ட வரே நல்ல பயிற்சி அடைந்தவர் ஆகின்றனர்.

'இனிது இனிது ஏகாந்தம் இனிது'
என்னும் பெரியோர் வாக்கின்படி நாம் தனியர்களாக வாழவேண்டும் என்பது இந்த ஐந்தாவது ஸ்லோகத்தின் விளக்கம்.

**ஞானம்**

அகங்காரம் இருக்கும் வரையில் அஞ்ஞானமும் இருக்கிறது. இறைவா! நீயே கர்த்தா; நான் உன் கையில் ஒரு கருவி என்று உணர்வது ஞானத்தின் விளைவாகும்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர்.

## ஸ்லோகம்—6

## உயிர் உள்ளவரைதான் உறவு

யாவத்பவனோ நிவஸதி தேஹே
தாவத் ப்ருச்சதி குசலம் கேஹே
கதவதி வாயௌ தேஹாபாயே
பார்யா பிப்யதி தஸ்மின் காயே

**கருத்துரை :—**

நீ உயிரோடு உலவி வரும்போது வீட்டிலுள்ளவர்கள் அனைவரும் உன்னுடைய க்ஷேமத்தைப்பற்றி அடிக்கடி விசாரிக்கிறார்கள். உன் உயிர் போன பிறகு உன்னை நினைப்பாரில்லை. நீ உயிரோடு இருக்கும்போது உன் உடலை அணைத்துக்கட்டிக் குலவின மனைவிகூட உயிரற்ற உன் உடலைப்பார்த்து பயப்படுகிறாள் அல்லவா? ஆகவே, உறவைச் சதமென நினைக்காதே.

**விளக்கவுரை :—**

''காதற்ற ஊசியும் வாராது காணும் கடை வழிக்கே'' என்பது பட்டினத்து அடிகளின் வாக்கு.

மக்கள் இவ்வுலக மாயையில் ஆழ்ந்து மயங்குகின்றனர். என் மனைவி, என் மக்கள், எனது செல்வம் என்று கூறிக்கொண்டே, அவைகளின் மீது ஆழ்ந்த பற்றுடன் வாழ்கிறார்கள். ஆனால் திடீரென்று ஒருநாள் காலன், நம்மை இவைகளிலிருந்து பிரித்துவிடும்போது, நமக்கு ஏமாற்றமே ஏற்படுகிறது.

ஒரு மனிதன் இறந்து விட்டால், அவனுடைய மனைவி வீட்டு வாசற்படிவரையில், கணவனுடைய

உடலை பற்றிக்கொண்டு அழுகிருள். அவனுடைய மக்களும், சுற்றத்தாரும் சுடுகாடுவரை சென்று, அவனது உடலை எரித்துவிட்டு வந்துவிடுகின்றனர். அவன் உயிருடன் இருக்கும்போது சேர்த்து வைத்த பொன்னும், பொருளும், பதவியும், பட்டங்களும் எதுவும் அவனுடன் செல்லுவதில்லை. அவனுடைய பாவ, புண்ணியங்கள் மட்டுமே அவனுடன் செல்லுகிறது.

இந்த உலகம் ஒரு நாடக மேடை. நமது வாழ்க்கை அதில் நடைபெறும் ஒரு நாடகம். நாம் எல்லோரும் அதில் நடிக்கும் பாத்திரங்கள் என்று ஒரு அறிஞர் கூறுவது மிகவும் பொருத்தமாக இருக்கிறது. ஒருவர் அப்பாவாகவும், மற்ருெருவர் அம்மாவாகவும், சிலர் மக்களாகவும், பலர் பந்துக்களாகவும், மித்திரர்களாகவும் நடித்து வாழ்க்கை என்னும் நாடகம் முடிந்தவுடன், அவர்களுக்குள் எந்தவிதமான தொடர்பும் இல்லாமல் போய் விடுகிறது.

உதாரணமாக, 'அரிச்சந்திரன் நாடகம் நடைபெறும்போது, ஒருவருக்கொருவர் சம்பந்தம் இல்லாத பல நடிகர்கள் மேடையில் தோன்றி நடிக்கிருர்கள். அவர்களில் அரிச்சந்திரனுக நடிப்பவர் அப்பாவாகவும், சந்திரமதியாக நடிப்பவள் அம்மாவாகவும், லோகிதாசனுக நடிப்பவன் மகனுகவும், தோன்றுகின்றனர். லோகிதாசன் இறந்துவிடும் காட்சியில், சந்திரமதியாக நடிப்பவள் கதறி அழுகிருள். அந்தக் காட்சியை காண்பவர்களும், உள்ளம் உருகி, உணர்ச்சிவசப்பட்டு அழுகிருர்கள். ஆனுல், அந்த நாடகம் முடிந்தவுடன் அவர்கள் எல்லோரும் பிரிந்து வெவ்வேறு திக்குகளில் போய்விடுகிருர்கள். அதன் பிறகு, அவர்களுக்குள் எந்தவிதமான தொடர்பும் இருப்பதில்லை.

அதே மாதிரி, நாமும் உலகில் உயிருடன் இருக்கும் வரையில்தான் எல்லாவிதமான சொந்தங்களும், உறவுகளும், உரிமைகளும் கொண்டாட முடியும். நமது உடலிலிருந்து உயிர் பிரிந்தவுடனேயே இந்த பந்தங்களும் அறுந்துவிடுகின்றன. இதுதான் நம்முடைய வாழ்க்கை.

சாதாரணமாக மனிதர்கள் காட்டும் அன்பு போலியானது. ஆசையின் அடிப்படையில் சரீரத்தின் கவர்ச்சி காரணமாக ஏற்படும் சுயநலம் மிகுந்த உணர்ச்சியையே நாம் 'அன்பு' என்று கூறிக்கொண்டிருக்கிறோம். ஒரு நபர் மற்றொருவருக்கு உபயோகமாக இருக்கும்வரை, அந்த நபரிடம் அன்பு செலுத்துவதையும், அதே நபரிடமிருந்து 'எந்தவிதமான உதவியையும் எதிர்பார்க்க முடியாது' என்னும் நிலை ஏற்படும்போது அந்த நபரை உதாசீனம் செய்வதையும், வெறுத்து ஒதுக்குவதையும் காணலாம். ஆண்டவன் ஒருவனே, பரிசுத்தமான அன்பு செலுத்த வல்லவன். மற்ற அன்புகள் எல்லாம் சுயநலம் மிக்கவை. எளிதில் மறக்கக்கூடியவை.

இதே கருத்தை :—

என் பெற்ற தாயாரும் என்னைப்
பிணமென்று இகழ்ந்து விட்டார்
பொன்பெற்ற மாதரும் போஎன்று
சொல்லிப் புலம்பிவிட்டார்
கொன் பெற்ற மைந்தரும் பின்வலம்
வந்து குடம் உடைத்தார்
உன் பற்று ஒழிய ஒருபற்றும்
இல்லை உடையவனே.

என்று பட்டினத்து அடிகள் பாடுகிறார்கள்.

இந்த உண்மையை நன்கு உணர்ந்து, அழியும் பொருள்களில் உள்ள பற்றை நீக்கி, அழியாப் பொருளாகிய இறைவன் பால் நாட்டம் கொண்டு, இனிது வாழப் பழகிக்கொள்ள வேண்டும் என்பதே இந்த ஸ்லேகத்தின் கருத்து ஆகும்.

இதே கருத்தை திருக்குறளில் :—

'பற்றுக' பற்றற்ருன் பற்றினை—அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

என்று திருவள்ளுவர் கூறுகிருர்.

**சிவானந்தர் அருள்வாக்கு**

மரணம் மறைமுகமாக இருந்து இரவும் பகலுமாக உன்னைத் தாக்கிய வண்ணமாகவே இருக்கிறது. எனினும் நீ சாசுவதமாக இவ் உலகில் இருக்கப் போவதாக நினைத்துக் கொண்டிருக்கிருய். இது தான் மாயை.

### ஸ்லோகம்-7.

## இறை உயர்வு

பாலஸ்தாவத் க்ரீடாஸக்தஸ்-
தருணஸ்-தாவத் தருணீஸக்த:
வ்ருத்தஸ்-தாவச்சிந்தாஸக்த:
பரே ப்ரஹ்மணி கோபி ந ஸக்த:

**கருத்துரை :—**

மனிதனுக்கு பாலியம், யௌவனம், விருதாப்பியம் என மூன்று பருவங்கள் உள்ளன. இளைஞன் விளையாடுவதில் மகிழ்கிறான். வயது வந்தவன் பெண்ணுடன் காலம் கழிக்கிறான். கிழவன் நோயாலும், மரண பயத்தாலும் எப்போதும் கஷ்டப்படுகிறான். எவனும் எந்தப் பருவத்திலும் தெய்வத்தைப் பற்றிச் சிந்தனையே செய்வதில்லை. என்னே உலக இயல்பு! என்று வியக்கிறார்.

**விளக்கவுரை :—**

இந்த ஸ்லோகத்தில் மக்கள் எந்த பருவத்திலும் தெய்வத்தைப் பற்றிச் சிந்திப்பதே இல்லை என்று கூறியிருப்பதை கவனிக்க வேண்டும்.

இன்று ஒவ்வொரு வீட்டிலும் பூஜை அறைகளும், சுவாமி படங்களும் தவறாமல் இருப்பதை காண்கிறோம். மக்கள் தினசரி பூஜையும் செய்கிறார்கள். அத்துடன் தெருவுக்கு நான்கு ஆலயங்களும், ஏராளமான நடைபாதை கோயில்களும் தோன்றிக்கொண்டே இருக்கின்றன. அந்த கோவில்களில் வழிபாட்டுக்கு வரும் கூட்டமும் நாளுக்கு நாள் பெருகிக்கொண்டேயிருக்கிறது. அப்படியிருந்தும் ''எவருமே தெய்வத்தைப் பற்றி

சிந்தனை செய்வதில்லை'' என்று பகவத் பாதர்கள் கூறியிருப்பதன் காரணத்தை சிந்திப்போம்.

நாம் இந்த உலகில் பிறந்த நாள்முதல், நமது இறுதிக்காலம்வரை வளர்ந்துக்கொண்டே இருக்கிறோம். உலகில் உள்ள சகல பொருள்களும், எல்லா ஜீவராசிகளும் ஒவ்வொரு விநாடியும் மாறிக் கொண்டும், வளர்ந்துகொண்டும் இருப்பது இயற்கையின் நியதி. எவ்வாறு நமது உடல் நம்மை அறியாமலே வளர்ந்துகொண்டிருக்கிறதோ, அதே மாதிரி நம்முடைய அறிவும், உள்ளமும், கலைகளும், திறமையும் நம்முடைய முயற்சியினால் வளர வேண்டும். 'நமது உடலைவிட அறிவும், உள்ளமும், ஆன்மாவும் சிறந்தது' என்னும் கருத்தை, பகவத் கீதை 3-வது அத்தியாயம், 42-வது ஸ்லோகம் விளக்கிக்கூறுகிறது.

நாம் செல்வத்தால் மட்டும் வளர்ந்தால் போதாது. நமது சுற்றுப்புறமும், சூழ்நிலையும் நாளுக்கு நாள் வளரவேண்டும் ஆனால், மக்களுடைய முழு முயற்சியும் அவர்களுடைய உடலையும், செல்வத்தையும் பெருக்குவதிலேயே கண்ணும் கருத்துமாய் இருக்கின்றனர். ஒரு சிலர் அவர்களுடைய அறிவை ஓரளவுக்கு வளர்க்கின்றனர். ஆனால் எவருமே உள்ளத்தையும் ஆன்மாவையும் வளர்க்க நினைப்பதில்லை. ஆன்மாவின் வளர்ச்சியே உண்மையான வளர்ச்சியாகும். மற்ற வளர்ச்சிகளுக்கு முடிவு உண்டு. இறுதியில் அழிந்து விடும் தன்மையானது அறிவு வளர்ச்சியும், உடலுடன் சம்மந்தப்பட்டது உடலுடன் அழியக் கூடியது. ஆனால் ஆன்ம வளர்ச்சி அழியாதது. அது தெய்வீகமானது நமது பிறவிப் பிணியை தீர்க்க உதவுவது.

நம்முடைய ஆன்ம அறிவை வளர்க்கவும், நமக்கு மன அமைதியை உண்டாக்கி உண்மையான

சுகத்தை ஏற்படுத்தவும், நமது முன்னோர்கள் ஆலயங்களை நிறுவினார்கள். அதன் வாயிலாக மக்களுக்கு அநேக நன்மைகள் ஏற்படவும், மக்கள் மேன்மையடையவும் வழிவகைகள் செய்தார்கள். ஆனால், இன்று மக்கள், ஆலயங்களுக்குச் சென்று, இறைவனுக்கு அர்ச்சனைகள், அபிஷேகங்கள், அலங்காரங்கள், விழாக்கள் செய்வதை கௌரவத்திற்காகவும், ஆடம்பரத்திற்காகவும், பிரதிபலனை எதிர்பார்த்தும் செய்வது அவர்களுடைய அறியாமையையே காட்டுகிறது. அதனால், அவர்களுக்கு எந்தவிதமான பயனும் ஏற்படாமல், ஏமாற்றமும் அடைகின்றனர்.

இதே காரணத்தினால்தான் விவேகானந்த சுவாமிகள் 'ஆலயங்கள் எந்த நோக்கத்துடன் ஏற்படுத்தப்பட்டனவோ, அதன் அடிப்படையில் தற்கால ஆலயங்கள் மக்களுக்கு உபயோகப்படவில்லை' என்று கூறியிருக்கிறார்கள்.

இந்த உலகில் நமக்கு எதுவுமே சொந்தமில்லை. அப்படியிருக்க, இந்த பிரபஞ்சத்திற்கே அதிபதியாக இருக்கும் இறைவனுக்கு நாம் என்னதான் பரிசாக கொடுக்க நமக்கு தகுதி இருக்கிறது. முடியுமானால் நம்மையே இறைவனுக்கு அற்பணிப்பதுதான் நம்மால் செய்யமுடியும். அதுவே பூரண சரணாகதி எனப்படும். அதைவிட்டு, இறைவனுக்கு தங்கத்திலும், வெள்ளியிலும், இரதங்கள் செய்து வைப்பதையும், நவரத்தினங்கள் இழைத்த கிரீடமும், கவசமும் அணிவிப்பதையும், பெரிய ஆலய திருப்பணிகள் செய்வதையும், உண்டியலில் காணிக்கை போடுவதையும், மக்கள் அவர்களுடைய திருப்திக்கும், மன அமைதிக்கும், சந்தோஷத்திற்கும் செய்யாமல் பிறர் நம்மை பாராட்டவேண்டும் என்ற எண்ணத்துடனோ, அல்லது பிரதிபலனை எதிர்

பார்த்தோ செய்வது அவர்களுடைய அறியாமை யையே காட்டுகிறது.

அத்துடன் சர்வ வியாபியாக எங்கும் நிறைந் துள்ள பரம்பொருளை, உலகம் முழுவதும் உள்ள எல்லாப் பொருள்களிலும், சகல ஜீவராசிகளிலும் கண்டு, போற்றி, பாராட்டி வணங்காமல், ஆலயங் களில் உள்ள விக்ரகங்களில் மட்டுமே, இறைவனை காண்பது, அவர்களுடைய பக்குவமில்லாத நிலையைக் காட்டுகிறது.

இதே கருத்தை, பகவத் கீதையில், 7வது அத்தி யாயம், 20வது ஸ்லோகத்தில் எவனுடைய அறிவு ஆசையினால் கவரப்பட்டுள்ளதோ, அவன் அவ் வாசையினால் தூண்டப்பட்டு, பல தெய்வங்களை வழிபடுகிறான் என்றும், 24வது ஸ்லோகத்தில் ''மந்தமதியை உடையவர்கள் என்னை மறைந்துள் ளோனாகவும், வெளிப்படுபவனாகவும் நினைக்கிறார் கள். அவர்கள் என்னுடைய உத்தமமான பரம நிலையை அறியாதவர்கள்'' என்றும் பகவான் கூறுகிறார்.

இதே கருத்தைத்தான் ஸ்ரீ பகவத் பாதர்கள் அவர்களும், பஜ கோவிந்தம் 7வது ஸ்லோகத்தில், ''மக்கள் இறைவனையும், இயற்கையின் இயக்கங் களையும் சரியாக புரிந்துகொண்டு வாழாமல், வந்தோம், இருந்தோம், சென்றோம் என்று வாழ்ந்து எந்தப் பிராயத்திலும் தெய்வத்தைப்பற்றி சிந்தனை செய்வதில்லை'' என்று குறிப்பிடுகிறார்.

இதே கருத்தை தெய்வப் புலவர் திருவள்ளுவரும்,

'இருள்சேர் இருவினையும்—சேரா இறைவன்
பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு''.

என்று திருக்குறளில் கூறுகிறார்கள்.

---

## ஸ்லோகம்-8

# பிறவிப்பயன் (அல்லது) விசித்திர உலகம்

கா தே காந்தா கஸ்தே புத்ர:
ஸம்ஸாரோ(அ)யமதீவ விசித்ர:
கஸ்ய த்வம் வா குத ஆயாதஸ்-
தத்வம் சிந்தய ததிஹ ப்ராத:

**கருத்துரை :—**

*''தம்பி! உனக்கு மனைவி யார்? மக்கள் யார்? இந்த உலக வாழ்க்கையே விசித்திரமானது. நீ யாருக்குச் சொந்தமோ, எங்கிருந்து வந்தாயோ? இந்த உண்மையைப் பற்றி சிந்தனை செய். நீ இந்த உடலல்ல என்பதைப்பற்றியும், எதனால் பிறவி எடுத்தாய் என்பதைப் பற்றியும் சிந்தனை செய்து கொண்டிரு'' என்பது கருத்து.*

**விளக்கவுரை :—**

*''கற்றது கைமண் அளவு*
*கல்லாதது உலகளவு''*

*என்று அறிவிற் சிறந்த ஔவைப்பிராட்டியார் அவர்களே கூறும் போது வாழ்க்கையில் சிறிதும் அனுபவம் இல்லாத நாம் இந்த உலகைப்பற்றியும், அதில் நடைபெறும் நிகழ்ச்சிகளையும் முழுமையாக உணர்ந்து கொள்வது மிகவும் கடினம்.*

*உலகில் எந்தக்காரியமும், காரணம் இல்லாமல் நடைபெறுவதில்லை. அதே மாதிரி இந்த உலகமும், அதில் நடைபெறும் நிகழ்ச்சிகளும் ஒரு காரணத்தை முன்னிட்டுதான் இயங்கிக்கொண்டிருக்கிறது. நாம் எல்லோருமே அந்த இயக்கத்தில் கட்டுண்டு இயங்கி கொண்டிருப்பதால் இயற்கையின் திட்டங்களை நம்மால் புரிந்துகொள்ள முடிவதில்லை.*

''மனித வாழ்க்கை ஒரு ரயில் பிரயாணம் போன்றது'' என்று ஒரு அறிஞர் கூறுகிறார். குறைந்த தூரம் செல்லுகிறவர்கள் சிலமணி நேரங்களும், தொலை தூரம் செல்லுகிறவர்கள் சில நாட்களும் ரயிலில் செல்லுவது போலவே மக்கள் உலக வாழ்க்கையிலும் பலருடன், பல ஆண்டுகள் வாழ்ந்து பலவிதமான அனுபவங்களை அடைகின்றனர். இறுதியில் எல்லோருமே ஒருநாள் வாழ்க்கைப் பயணத்தை முடித்துக் கொள்ளுகிறார்கள். அவர்களுடைய வாழ்க்கைப் பயணம் முடியும்போது, அவர்களுடைய அனுபவங்களும் மறைந்துவிடுகிறது.

அதே மாதிரி, நமது மனைவி, மக்கள், சுற்றத்தார் என்று நாம் பெருமையாக பேசிக் கொண்டிருப்பதெல்லாம் நமது உயிர் உடலில் ஒட்டிக் கொண்டு இருக்கும் வரையில்தான் நீடிக்கிறது. உயிர் பிரிந்த உடனேயே இந்த சொந்தங்களும், பந்தங்களும் மறைந்துவிடுகிறது. ''இதுதான் நமது வாழ்க்கை''.

ஆதலால், நாம் உயிருடன் வாழ்ந்துகொண்டிருக்கும் போதே, நான் யார்? எங்கிருந்து வந்து இங்கு பிறந்திருக்கிறேன்? எதற்காக பிறந்திருக்கிறேன்? எங்கு அழைத்துச் செல்லப்படுகிறேன்? என்பதை அடிக்கடி எண்ணிப் பார்க்க வேண்டும்.

அத்துடன், உலகில் பிறந்துள்ளவர்கள் அனைவரும் ஒருநாள் இறந்தே தீரவேண்டும் என்னும் உண்மையையும் அடிக்கடி ஞாபகப்படுத்திக்கொண்டால், பெருவாரியான மக்கள் வாழ்க்கையில் செய்யும் தவறுகளை தவிர்த்து சுய நல உணர்விலிருந்து விடுதலை அடைந்து நல்வாழ்வு வாழலாம் என்பதை இந்த எட்டாவது ஸ்லோகம் விளக்குகிறது.

---

## ஸ்லோகம்—9.

## நல்லோர் இணக்கம்

ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்
நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்வம்
நிர்மோஹத்வே நிச்சலதத்வம்
நிச்சலதத்வே ஜீவன்முக்தி:

**கருத்துரை** :—

நீ உண்மைப் பொருளை அறிந்த நல்லோர்களுடன் சேர்ந்து பழகினுல் உலகப்பற்றை அறுப்பாய். உலகப்பற்று நீங்கினுல் உன் மயக்கம் தொலையும். மயக்கம் தொலைந்தால் சாசுவதமான பரம்பொருளை அறிவாய். அதை அறிந்தால் நீ இந்த உலகில் வாழ்ந்திருக்கும்போதே ஞானியாக — அதாவது ஜீவன் முக்தனுக ஆகிவிடுவாய், இவ்வுலகிலேயே பேரின்பத்தை அடைவாய்.

**விளக்கவுரை** :—

மழைத்துளிகள் வானத்திலிருந்து விழும்போது அதில் எந்தவிதமான கலப்படமும் இல்லாமல், பரிசுத்தமானதாகத்தான் விழுகிறது. ஆனுல், பூமியில் விழுந்தவுடன் அதன் தன்மைமாறுகிறது. அது எந்தவிதமான இடத்தில் விழுந்து, எந்த விதமான பொருள்களில் கலக்கிறதோ, அதன் தன்மையை அடைந்து விடுகிறது. மலைகளின்மீது விழும் மழை ஜலம் நதியாக ஓடி பலவிதமான மண்ணுடன் கலந்து மக்களுக்கு பலவிதத்தில் பயன் படுகிறது. கடலில் விழும் மழைநீர் கடலுடன் கலந்து உப்பு ஜலமாக மாறிவிடுகிறது. சாக்கடையில் விழும் மழைத்தண்ணீர் நாற்றமடைகிறது.

காடுகளிலும், வயல்களிலும் பெய்யும் மழை மரங்களுக்கும், பயிர்களுக்கும், உணவாக உதவுகிறது.

அதேமாதிரி, நாமும் இவ்வுலகில் பிறக்கும் போது பரிசுத்தமாகத்தான் பிறக்கிறோம். அதன் பிறகு, எந்த சூழ்நிலைகளில் எவருடன் தொடர்பு கொண்டு வளர்கிறோமோ, அதற்குத் தக்கபடி நல்லவர்களாகவும், கெட்டவர்களாகவும், புத்திசாலிகளாகவும், முட்டாள்களாகவும், மாறிவிடுகிறோம்.

'நமது வாழ்க்கை இந்தப் பிறவியுடன் முடிந்துவிடுவதில்லை' என்று பகவத் கீதை கூறுகிறது. நமது இறுதிநிலையான முக்தி நிலையை அடையும்வரை பிறந்தும், இறந்தும், படிப்படியாக வளர்ந்து கொண்டே இருக்கிறோம்.

இந்தப் பிறவியை பயனுள்ளதாக ஆக்க நாம், நமக்கு நல்வழிகாட்டும் அறிவிற் சிறந்த பெரியோர்களிடம் தொடர்பு கொண்டு நமது வாழ்க்கையை வளமானதாகவும், பயனுள்ளதாகவும் ஆக்கிக்கொள்ள முயற்சி செய்யவேண்டும்.

நாம் நம்முடைய பிறவிப் பிணியிலிருந்து சீக்கிரமாக விடுதலை அடைய வேண்டுமானால், அல்லது முக்தி நிலையை அடைய நமது இந்தப்பிறவியில் இறக்கும்போது, அமைதியான நிலையில் இறக்க வேண்டும். நம்முடைய இறுதிக் காலத்தில் அமைதியாக இறக்க வேண்டுமானால் நாம் வாழ்ந்திருக்கும் போதே நம்மிடம் உள்ளப் புறப்பொருள்களிலும், நமது உற்றார், உறவினர்களிடமும் வைத்திருக்கும் பற்றை அறவே அறுக்க வேண்டும்.

ஆனல் பற்றை அறுப்பது அவ்வளவு சுலபமான காரியம் அல்ல''. உண்மைப் பொருளை அறிந்த பெரியோர்களின் கூட்டுறவினுல்தான் உலகப் பற்றை அறுத்து நாமும் ஞானிகளாக ஆக முடியும். ஞானிகளால்தான் உலக மாயையில் சிக்காமல் அமைதியாக இருந்து ''முக்தி என்னும் பேரின் பத்தை சுலபமாக அடைய முடியும்'' என்பது இந்த 9-வது ஸ்லோகத்தின் கருத்து.

இதே கருத்தை பகவத்கீதை 2வது அத்தியா யம், 51வது ஸ்லோகத்தில், ''ஞானிகள் செய்கை யின் பலனில் கொண்ட பற்றுதலை துறந்து, பிறவித் துன்பத்தினின்றும் விடுதலை அடைந்து பேரானந்த நிலையை எய்துகிருர்கள்'' என்று பகவான் கூறுகிருர்.

**சிவானந்தர் அருள்வாக்கு**

உலகில் பொருள்கள் உன்னை பந்தப் படுத்தும். உனது ஆன்மீக முன்னேற்றத்தை தடை செய்யும். எனவே அவற்றின் மீதுள்ள ஆசையை ஆண்டவன்பால் திருப்பு.

## ஸ்லோகம்–10.

## சம்சார வாழ்க்கை.

வயஸி கதே க: காம விகார:
சுஷ்கே நீரே க: காஸார:
க்ஷீணே வித்தே க: பரிவாரோ
ஜ்ஞாதே தத்வே க: ஸம்ஸார:

**கருத்துரை :—**

*வயது கடந்த பின் காம விகாரம் ஏது?*
*தண்ணீர் வற்றிய பின் குளம் ஏது?*
*செல்வம் அழிந்த பின் சுற்றம் ஏது?*
*தத்துவத்தை அறிந்த பின் ஸம்சாரம் ஏது?*

**விளக்கவுரை :—**

மனித வாழ்க்கை சுழலாகிய 'சம்சாரம்' என்பது ஒரு இருட்டு அறையை போன்றது. அதனுல் அதில் நடைபெறும் அநேக காரியங்கள் நமக்கு தெளிவாக விளங்குவதில்லை. மக்கள் உலகில் பிறப்பதும், பிறகு மடிவதுமாக தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. ''வாழ்க்கையின் நோக்கம் என்னவென்று தெரியாமலே வாழ்ந்துகொண்டிருப்பதால்தான் நமக்கு மீண்டும், மீண்டும் பிறவி உண்டாகிறது'' என்று பகவத்கீதை கூறுகிறது.

இருள் சூழ்ந்த ஒரு அறையில் உள்ள பொருள்களை நம்மால் காணமுடிவதில்லை. நாம் எவ்வளவு முயன்றுலும் இருட்டை நம்மால் விரட்ட இயலாது. ஏனெனில் இருட்டு என்பது ஒரு பொருளே அல்ல. வெளிச்சம் இல்லாத இடத்தையே இருட்டு என்று கூறப்படுகிறது. அந்த ''இருட்டு'' அறைக்குள் வெளிச்சத்தை கொண்டுவந்தால், இருள் தானுகவே விலகிக் கொள்ளுகிறது. அப்போது அந்த அறையில் உள்ள பொருள்களும் நமக்கு தெளிவாகத் தெரிகிறது.

அதேமாதிரி நமது 'அறியாமை' என்னும் இருட்டை, 'அறிவுத் தெளிவு' என்னும் வெளிச்சத்தைக் கொண்டு சுலபமாக போக்கிவிடலாம். நமக்கு அறிவில் தெளிவு ஏற்படும்போது நமது வாழ்க்கையின் உண்மையான நிலேயும் தெளிவாக விளங்குகிறது.

நாம் நமது அறியாமையினுல் நிலேயற்ற உலக வாழ்க்கையையும், அற்ப சுகத்தைக் கொடுக்கும் பொருள்களேயும், சுயநலமிக்க சுற்றத்தாரையும், சந்தர்ப்பவாதிகளான நண்பர்களேயும் சதம் என்று நம்பி இறுதியில் ஏமாற்றமே அடைகிருேம்.

நமக்கு அறிவில் தெளிவும், உள்ளத்தில் ஆன்மீக விழிப்புணர்வும் ஏற்படும்போது, நிலேயற்ற வாழ்க்கையையும், நிலேயான முக்தியையும், நன்ருக உணர்ந்துகொள்ள முடிகிறது. அப்போது நாம், நமது சுயநல உணர்விலிருந்து விடுதலே அடைந்து, உலகில் உள்ள எல்லா ஜீவராசிகளுக்கும் இடையே நிலவியிருக்கும் 'கடவுள் தன்மை' என்ற ஒருமைப்பாட்டை நன்கு உணர்ந்து கொள்ளவும், பிறவிப் பிணியிலிருந்து, விடுதலே அல்லது முக்தியை அடையவும் முடிகிறது.

இதே கருத்தைத்தான் இந்த ஸ்லோகத்தில் நமது வாலிபம் கடந்த பிறகு, நமது காம விகாரங்களும் தானே விலகிவிடுகிறது என்றும், தண்ணீர் வற்றிய பிறகு அதை குளம் என்று கூறுவதில்லே என்றும் நமது செல்வம் அழிந்த பிறகு நமது சுற்றத்தார்கள் எவரும் நம்மை அண்டமாட்டார்கள் என்றும் கூறுகிறது. அதே மாதிரி வாழ்க்கையில் உண்மை நிலேயை புரிந்துகொண்டால், நமது ''சம்ஸார பந்தம்'' என்னும் பிறவிப் பிணியிலிருந்து சுலபமாக விடுதலே அடையலாம் என்று இந்த 10-வது ஸ்லோகம் விளக்கிக்கூறுகிறது.

---

## ஸ்லோகம்—11.

## கர்வப்படாதே

மா குரு தன-ஜன-யௌவன-கர்வம்
ஹரதி நிமேஷாத் கால: ஸர்வம்
மாயா-மயமித-மகிலம் ஹித்வா
ப்ரஹ்ம-பதம் த்வம் ப்ரவிச விதித்வா

**கருத்துரை** :—

செல்வத்தாலும் சுற்றத்தாலும் இளமையாலும் கர்வம் கொள்ளாதே. காலம் அனைத்தையும் ஒரு நிமிஷத்தில் கொண்டுபோய்விடுவான் மாயா மயமான இதையெல்லாம் விட்டு பிரம்மபதத்தை அறிந்து அதில் புகுவாயாக.

**விளக்கவுரை** :—

மக்களுடைய அறியாமைகளில் தலைசிறந்ததாகிய அகந்தையினால் அழிந்தவர்கள் அநேகர். கர்வத்துடனும், அகம்பாவத்துடனும் நடந்து கொள்ளுகிறவர்கள் அவமானமே அடைய நேரிடும். இதே கருத்தை

''அடக்கம் அமரருள் உய்விக்கும்—அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்''.

என்று திருக்குறள் ஆசிரியர் கூறுகிறார்.

இதை விளக்க மகாபாரதத்திலிருந்து ஒரு சிறு சம்பவத்தை கூறவிரும்புகிறேன். ஒருநாள் அர்ஜுனனும், அனுமனும் ஓர் ஓடையின் கரையில் சந்திக்க நேர்ந்தது. அப்போது, அவர்களுக்குள்

ஏற்பட்ட சர்ச்சையில் அவர்கள் இருவரில் ''வலிமையில் சிறந்தவர் எவர்'' என்ற போட்டியும், பந்தயத்தில் தோற்பவர் பிராணத்தியாகம் பண்ணவேண்டும் என்றும் முடிவு செய்தனர்.

அதன்படி அர்ஜுனன் அந்த ஓடையின்மீது தன்னுடைய அம்புகளை கொண்டு ஒரு பாலம் அமைத்து அந்த பாலத்தை ''அனுமானுல் ஏறி நின்று உடைக்க முடியுமா'' என்று சவால் விட்டான். அனுமனும் அந்த சவாலை ஏற்றுக் கொண்டு, அடக்கத்துடன், அவருடைய இதய தெய்வமாகிய ஸ்ரீ இராமபிரானை வணங்கி, அந்த பாலத்தின்மீது ஏறிநின்று, ஹே! ராம்! என்று கூறி, ஒரு குதி குதித்தார். உடனே அந்த பாலம் நொறுங்கி உடைந்துவிட்டது.

அதைக் கண்டு அவமானமடைந்த அர்ஜுனன் தோல்வியை ஒப்புக்கொண்டு, விறகுகளை அடுக்கி, தீக்குளித்து இறக்கச் சித்தமானுன்.

அப்போது பகவான், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா, அங்கு ஒரு பிராமணனின் உருவில் தோன்றி, அர்ஜுனனை தடுத்து, அவனுடைய தோல்விக்கு சாட்சி இல்லாததால், அவன் அவ்வாறு பிராணத்தியாகம் செய்யக்கூடாது என்றும், அவர்களுடைய போட்டியை மீண்டும் ஒருமுறை அவரது முன்னிலையில் செய்தால் அவர் தீர்ப்பு கூறுவதாகவும் கூறினுர்.

அர்ஜுனனுக்கு ஏற்கனவே ஏற்பட்ட தோல்வியினுல் மனத்தில் பயமும் அவமானமும் அடைந்திருந்தான். அவனுடைய கர்வமும் அடங்கியிருந்தது. ஆதலால், இந்த முறை இறைவனை வணங்கி, மிகுந்த பயபக்தியுடன் பாலத்தை அமைத்தான். ஆனுல், அனுமனுக்கு ஏற்பட்ட

வெற்றியினுல் தனது பலத்தில் மிகுந்த நம்பிக்கை ஏற்பட்டிருந்தது. அதனுல், இந்தமுறை அலட்சியத்துடனும், கர்வத்துடனும் அதன்மீது ஏறி நின்று குதித்தார். பாலம் சிறிதும் அசையவில்லை. கர்வத்தால் அவமானமடைந்த அனுமான் தோல்வியை ஒப்புக்கொண்டு, பிராணத்தியாகம் செய்ய தயாராஞர். அப்போது, பிராமண வடிவில் இருந்த கண்ணபிரான் அனுமனை தடுத்து, தனது உண்மை சொரூபத்தைக் காட்டி, அவர்கள் இருவருடைய அகந்தையை அகற்றவே அவ்வாறு செய்ததாக கூறி, அவர்களுக்கு புத்தியும் புகட்டிஞர்.

அதே மாதிரி, நாமும் நம்மிடம் உள்ள செல்வம், இளமை, பட்டம் முதலிய போலியான சம்பத்துக்களிஞல் கர்வம் கொள்ளாமல் அடக்கமாக இருக்க முயலவேண்டும். ஏனெனில், இந்த சம்பத்துக்கள் நிலையற்றவை. காலத்தால் அழியக் கூடியவை. அப்படி அழிய நேரிடும்போது, நாம், மற்றவர்களால் அலட்சியப்படுத்தப்பட்டு, அவமானப்பட நேரிடும்.

இந்த உண்மையை உணர்ந்து நாம் எப்போதும், எல்லோரிடத்திலும் அன்பாகவும், அடக்கமாகவும் இருக்கவேண்டும் என்பதை இந்த 11வது ஸ்லோகம் நமக்கு அறிவுறுத்திக் கூறுகிறது.



## ஸ்லோகம்-12

# காலத்தின் விளையாட்டு

தினயாமின்யௌ ஸாயம் ப்ராத:
சிசிர-வஸந்தௌ புனராயாத:
கால: க்ரீடதி கச்சத்யாயுஸ்-
ததபி ந முஞ்சத்-யாசா வாயு:

**பதவுரை :—**

பகலும், இரவும், மாலையும், காலையும், குளிர் காலமும், வஸந்த காலமும் மீண்டும் மீண்டும் வருகின்றன. காலம் விளையாடுகிறது. ஆயுள் செல்லுகிறது என்றாலும் ஆசாபாசம் விடுவதில்லை.

**விளக்கவுரை :—**

இறைவனுடைய படைப்பில், நமது கண்களுக்குப் புலப்படும் பொருள்கள் எல்லாவற்றிலும் மிகவும் பெரியதும், வல்லமை மிக்கதும், பூமியின் இயக்கத்திற்கு இன்றியமையாததுமான சூரியன், காலையில் பால்யமாகவும், அழகாகவும், சாந்தமாகவும், உதித்து படிப்படியாக வளர்ந்து உச்சி வேளையில் அதிக உஷ்ணமாகவும், வீரியத்துடனும், இளமைத்துடிப்புடனும் இருந்து மாலையில் சக்தி குறைந்து சாந்தமடைந்து இறுதியில் மறைந்து விடுவதை நாம் தினசரி காண்கிறோம்.

நமது வாழ்க்கையும் இப்படித்தான் ஒரு நாள் மறைந்துவிடும் என்பதை இயற்கை நமக்கு தினசரி ஞாபகப்படுத்திக் கொண்டேயிருக்கிறது. அதே மாதிரி பருவகாலங்களும் மாறி மாறி வந்து நமது வாழ்நாட்களில் கணக்கை நமக்குத் தெரியப் படுத்திக் கொண்டிருக்கிறது.

உலகில் பிறந்துள்ள உயிர்களெல்லாம் ஒரு நாள் 'மறைந்தே தீரவேண்டும்' என்பது இயற்கையின் நியதி. நாமும் இந்த உண்மையை அடிக்கடி மனதில் கொண்டு, அதற்கு சித்தமாக இருக்க பழக்கப்படுத்திக்கொள்ள வேண்டும்.

சந்திரனின் வளர்ச்சியும், தேய்வும், நமது சுகதுக்கங்கள் மாறி மாறி வருவதை நமக்கு உணர்த்துவதாக இருக்கிறது.

நமது வாழ்க்கையில் மாறி மாறி வரும் அனுபவங்களையும், சந்தர்ப்பங்களையும், இயற்கையின் பருவங்களையும் தக்க முறையில் பயன்படுத்திக் கொள்வதே அறிவுடமை ஆகும். காலம் பொன்னனது. நாம் காலத்தை பயன்படுத்திக் கொண்டாலும், பயன்படுத்த தவறினாலும் அது நம்மை கடந்து சென்று கொண்டேயிருக்கும். அது எவருக்காகவும் காத்திருக்காது. காலம் எவரிடத்திலும் எந்தவிதமான பாகுபாட்டையும் காட்டுவதில்லை.

ஒரு நதியில் தண்ணீர் ஓடும்பொழுது அதை விவசாயம், தொழில், குடிநீர் முதலிய அவசியமான செயல்களுக்கு பயன்படுத்த தவறினல், அது நமக்கு பேரிழப்பை உண்டாக்கும். அதனுல், ஆற்றில் நீர் வற்றிய சமயங்களில் அதன் அருமையை உணர்ந்து, துன்பங்களை அனுபவிக்க நேரிடும். ஆற்று நீர் எவருக்காகவும் காத்திருக்காது.

அதே மாதிரி ஓடிக்கொண்டேயிருக்கும் நமது ஆயுள்காலத்தையும் நல்ல முறையில் பயன்படுத்தி, அமைதியாக வாழ்ந்து, அதன் இறுதி லட்சியமான முக்தியை அடைய முயற்சி செய்வதே நமது கடமையாகும் என்பதே இந்த பன்னிரெண்டாவது ஸ்லோகத்தின் கருத்து.

---

## ஸ்லோகம்–13
## நல்லோர் இணக்கம்

*ஸ்ரீ பத்மபாதர் கூறியது :—*

கா தே காந்தா-தனகத-சிந்தா
வாதுல கிம் தவ நாஸ்தி நியந்தா
த்ரிஜகதி ஸஜ்ஜன-ஸங்கதி-ரேகா
பவதி பவார்ணவ-தரணே நௌகா

**கருத்துரை :—**

*காற்றைப்போல் அலைபவனே! மனைவியைப் பற்றியும் பொருளைப்பற்றியுமே ஏன் சிந்தனை? உன்னை அடக்குபவர் இல்லையா? பிறவிக் கடலைக் கடக்கும் படகு மூவுலகிலும் நல்லோருடைய கூட்டுறவாகிய ஒன்றேதான் ஆகும்.*

**விளக்கவுரை :—**

*'இயல்பினுன் இல்வாழ்க்கை – வாழ்பவன் என்பான்*
*முயல்வாருள் எல்லாம் தலை''*

*என்று திருவள்ளுவர் கூறுகிறுர். அதன்படி மக்களுக்கு இல்வாழ்க்கை இன்றியமையாதது. கணவனும், மனைவியும் சேர்ந்து வாழ வேண்டியது இயற்கையின் நியதி. அது தெய்வீகமானது. ஆனுல் மக்கள் திருமண வாழ்க்கையில் பொதிந்து கிடக்கும் உண்மைகளையும், அதில் அவர்கள் ஆற்ற வேண்டிய கடமைகளையும் மறந்து மனைவியை ஒரு போகப் பொருளாகவோ அல்லது மனிதனுடைய அடிமையாகவோ செய்வது மிகவும் வருத்தமும், அவமானமும் அடைய வேண்டிய செயலாகும். மற்றும் சிலர் பெண்டாட்டி தாசர்களாக இருந்து வருவதும் தவறுனது. இல்வாழ்க்கையில் கணவனும், மனைவியும் தங்களுடைய பொறுப்பு*

களை உணர்ந்து நடந்து கொண்டால் அந்த வாழ்க்கை சொர்க்கமாக அமையும்.

அதே மாதிரி பணமும் வாழ்க்கைக்கு தேவையாக இருக்கிறது. ஆனால் பெருவாரியான மக்கள் பணம் சம்பாதிப்பதிலும், பொருள் ஈட்டுவதிலுமே கண்ணும் கருத்துமாக இருக்கிறார்கள். பணத்தையும், பொருள்களையும் தவறானவழியில் சேர்க்கவும் தயங்குவதில்லை. அத்துடன் வாழ்க்கையில் ஆற்ற வேண்டிய கடமைகளையும், அடைய வேண்டிய குறிக்கோளையும் மறந்து, உலகப் பொருள்களைப் பற்றியும், சிற்றின்பங்களைப் பற்றியுமே சிந்தித்து, கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். அதனால், அமைதியின்றி கஷ்டப்படுகிறார்கள்.

மக்களுடைய மனம், அவர்களுடைய மனைவி மக்களிடமும், உலகப் பொருள்களிடத்திலும் ஈடுபட்டு இருக்கும் வரை அவர்களுக்கு இறைவனைப் பற்றிய சிந்தனைகள் ஏற்படுவதில்லை. அதனால் அவர்களுக்கு முக்தியில் நாட்டம் உண்டாவதில்லை.

நாம் பிறவியிலேயே பலவிதமான அறியாமைகள் நிறைந்தவர்களாக இருக்கிறோம். ஆதலால் நல்லோருடைய அறிவுரைகளை கேட்டும், வாழ்க்கைக்கு வழிகாட்டும் நல்ல நூல்களைப்படித்தும், நமது அறியாமை இருளை போக்கிக்கொள்ள வேண்டும். நாம் வாழ்க்கையில் ஆற்ற வேண்டிய கடமைகளையும், அனுசரிக்கவேண்டிய நியதிகளையும், தெரிந்துகொள்ள சாஸ்திரங்களை கற்று அறிந்த அறிஞர்களை நாடவேண்டும்.

சம்சாரம் என்னும் வாழ்க்கை பெருங்கடலை கடக்க நல்லோருடைய கூட்டுறவுதான் வழிகாட்டும் என்பதை இந்த பதிமூன்றாவது ஸ்லோகம் விளக்குகிறது

---

## ஸ்லோகம்-14.

## சன்னியாச வாழ்க்கை

---

தோடகாசார்யர் கூறியது

ஜடிலோ முண்டீ லுஞ்சிதகேச:
காஷாயாம்பர-பஹுக்ருத-வேஷ:
பச்யந்நபி ந பச்யதி மூடோ
ஹ்யுதரநிமித்தம் பஹுக்ருத-வேஷ:

**கருத்துரை** :—

சடை தரித்தவனே, தலை மழித்தவனே, கேசத்தைக் கத்தரித்துக் கொண்டவனே, காவித் துணியால் வெகுவாய் வேஷம் போட்டவனே, எவனுயிருந்தாலும் மதியில்லாதவன் பார்த்தும் பார்ப்பதில்லை வெகுவாக வேஷமெல்லாம் வயிற்றின் பொருட்டே ஆகிறது.

**விளக்கவுரை** :—

''இந்திரிய சுகங்களுக்கே ஓடி யாடி,
இழிவடைந்து துறவடைந்தோர்
பலபேருண்டு
வந்த கடன் தீர்ப்பதற்கு வழியில்லாமல்
வைராக்கியம் பூண்டவர்கள் வகையும்
உண்டு.
கந்தையற்றுத் தரித்திரத்தின்
கவலை — மாற்றக்
காவியுடை அணிந்தவரைக் காண்பதுண்டு

என்று அரசவைக் கவிஞர் ஸ்ரீ ராமலிங்கம் பிள்ளை பாடுகிறார்கள்.

அதன்படி வாழ்க்கையில் உழைத்து சம்பாதித்து வாழ விருப்பமில்லாமல் மற்றவர்களுடைய அறியாமையை தவருக பயன்படுத்தி சோம்பேறிகளாகவும், குயுக்திவாதிகளாகவும், வாழவும் சுலபமாக பெரும் பொருள் சேர்க்கவும் உற்ற உபாயமாகக் கருதி அநேகர் துறவிகள்போல் வேஷம் போடுகிருர்கள். தெய்வத்தின் பெயரால் மக்களை சுலபமாக ஏமாற்றுகிருர்கள். எவருமே காணுத இறைவனைக் கண்டதாக கூறி மக்களுக்கு மதி மயக்கத்தை உண்டாக்குகிருர்கள்.

அவர்கள் அடைய வேண்டிய குறிக்கோள் 'முக்தி' என்பது அவர்களுக்குத் தெரிந்திருந்தாலும், அதை அடையவேண்டிய மார்க்கங்களை அனுசரித்து வாழ்ந்து மக்களுக்கு வழிகாட்டிகளாக நடந்து கொள்ளாமல் போலியாக வாழ்ந்து இறைவன் நாமங்களை வாயினுல் மட்டும் உச்சரித்துக் கொண்டு பக்தர்கள் மாதிரி வேஷம் போட்டு மக்களை ஏமாற்றுகிருர்கள். அம்மாதிரி வேஷதாரிகளைக் கண்டு ஏமாந்துவிடாமல் நாம் விழிப்புணர்வுடன் இருக்கவேண்டும் என்று பகவத் பாதர்கள் நம்மை எச்சரிக்கிருர்கள்.

'சந்நியாசம்' என்ருல் எல்லாவற்றையும் விட்டு விடுதல் என்று பொருள். குறிப்பாக உற்ருர், உறவினர்களிடமும், உலகப் பொருள்கள் மீதும் உள்ள பற்றை விட்டு ஒழிப்பதே 'சன்னியாசம்' அல்லது 'துறவு' எனப்படும்.

மனித வாழ்க்கை நிலையற்றது என்பதை நன்குணர்ந்து நிலையான பேரின்பத்தை அடைய ஐம்பொறிகளின் வாயிலாக அனுபவிக்கும் அற்ப சுகங்களை விட்டு ஒழிப்பதே 'சன்னியாசம்' எனப் படும். அத்துடன் வாழ்க்கையில் எந்தவிதமான

திட்டங்களும் போடாமல் இயற்கையின் தீர்ப்புகளை முழுமையாக ஏற்றுக்கொண்டு, அதை அனுசரித்து வாழ்ந்து எப்போதும் ஆனந்த நிலையில் இருப்பதை யும் 'சன்னியாசம்' என்று கூறலாம்.

துறவிகள் ஐம்புலன்களையும் அடக்கி, அறிவுத் தெளிவுபெற்று, எப்போதும் இறைவன்பால் நாட்டம் கொண்டு, தூய வாழ்க்கை வாழ்ந்து, மக்களுடைய நல்வாழ்வுக்கு வழிகாட்டிகளாக விளங்குவதால் எல்லோராலும் போற்றி பாராட்டப் படுகின்றனர். அம்மாதிரி உண்மையான துறவி களையும், மகான்களையும் காண்பது மிகவும் அரிது.

இன்று நாம் காணும் காவி உடை அணிந்தவர் களும், மொட்டை அடித்துக்கொண்டும், சடையை வளர்த்துக்கொண்டும், சமய சின்னங்களை தரித்துக் கொண்டும், துறவிகள் மாதிரி தோன்றுகிறவர் களில் அநேகர் வயிற்றுப் பிழைப்பிற்காகவே அம்மாதிரி வேஷம் போடுகிறார்கள் என்று இந்த 14வது ஸ்லோகம் விளக்குகிறது.

**மதம்**

பாமரனைப் பண்புள்ளவனாகவும்,
பண்புள்ளவனை தெய்வமாகவும்
உயர்த்தும் கருத்தே மதம் எனப்படும்.

— விவேகானந்தர்.

## ஸ்லோகம்-15.

# ஆசை விடுவதில்லையே

*ஹஸ்தாமலகர் கூறியது :*

அங்கம் கலிதம் பலிதம் முண்டம்
தசனவிஹீனம் ஜாதம் துண்டம்
வ்ருத்தோ யாதி க்ருஹீத்வா தண்டம்
ததபி ந முஞ்சத்-யாசா-பிண்டம்

**கருத்துரை :—**

உடல் தளர்ந்து விட்டது. தலை நரைத்து விட்டது. வாயில் பல் இல்லாமல் போய்விட்டது. கிழவன் கோலை ஊன்றிக் கொண்டு நடக்கிறான். என்றாலும் ஆசைக் கூட்டத்தை விடவில்லை.

**விளக்கவுரை :—**

நாம் உலகில் பிறந்த நாள் முதல், இறுதிக் காலம் வரை, நமது உடல் வளர்ந்து கொண்டும், அழிந்து கொண்டும் இருப்பது இயற்கை. அதனால் அதற்கு பாலியம், இளமை, மூப்பு முதலிய மாற்றங்கள் ஏற்படுகிறது. இறுதியில் ஒரு நாள் அந்த உடல் பூரணமாக அழிந்து விடுகிறது. இந்த மாற்றங்களையோ, அழிவையோ எவராலும் தடுத்து நிறுத்தமுடியாது.

ஆனால் நமது ஆன்மாவும் அதன் உணர்வுகளும் அழிவற்றவை. ஆதலால், நமது உள்ளத்தை எப்போதும் இளமையாகவும், திடமாகவும்

வைத்துக்கொள்ள முடியும். அத்துடன் நமது உடலைவிட உள்ளம் உயர்ந்தது.

''சித்திரமும் கைப்பழக்கம்
செந்தமிழும் நாப் பழக்கம்''

என்னும் முதுமொழிக்கிணங்க, நாம் நமது உடலையும், உள்ளத்தையும் எந்த விதமாக பழக்கு கிறோமோ அதற்கு தக்கவாறு திடமானதாகவோ, அல்லது பலவீனமாகதாகவோ அமைந்துவிடுகிறது.

முறையாக பழக்கப்படுத்தப்பட்ட மனம் உறவாகி உதவுகிறது. முழுதும் கட்டுப்படுத்தப் பட்ட மனம் ஆன்மாவிலேயே லயித்து இன்பம் காண்கிறது. ஆனால் மனதை அடக்காதவனுக்கு அந்த மனமே பகையாக மாறி விடுகிறது.

புலன்களின் வாயிலாக அனுபவிக்கும் சுகம் நீடித்த இன்பத்தைக் கொடுக்காது. அத்துடன், புலன்களில் இன்பம் காணும் மக்கள், புலன் களுக்கு அடிமையாகிவிடுகின்றனர். அம்மாதிரி மக்களுடைய முதுமை காலத்தில் புலன்கள் வலு விழந்த நிலையில் கூட பழைய பழக்கங்கள் காரண மாக அவர்களுடைய இளமைக்கால நினைவுகள் வந்து தாக்கி, அவர்களை நரக வேதனைக்கு உள்ளாக்குகிறது.

ஆதலால், நாம் இளமையிலிருந்தே நமது புலன் களுக்கு அடிமை ஆகாமல், அவைகளை நல்ல முறையில் பயிற்றுவித்து மனதை இறைவன்பால் செலுத்தினால், அதில் எழும் அற்பமான ஆசைகளை அகற்றி, மனதை சஞ்சலமற்றதாக வைத்து, எப்போதும் ஆனந்த நிலையில் ''உற்சாகமாக வாழ வேண்டும்'' என்பதை இந்த பதினைந்தாவது ஸ்லோகம் நமக்கு ஞாபகப்படுத்துகிறது.

---

## ஸ்லோகம்-16

# ஆசையின் பிணைப்பு

சுபோதர் கூறியது:

அக்ரே வஹ்னி: ப்ருஷ்டே பானூ
ராத்ரௌ சுபுக-ஸமர்ப்பித-ஜானு:
கரதலபிக்ஷஸ்-தருதலவாஸஸ்-
ததபி ந முஞ்சத்யாசா-பாச:

**பதவுரை :—**

(பகலில்) எதிரில் அக்கினியும் பின்புறம் சூரியனும் (சுடச்சுடத் தவம் செய்கிறான்), இரவில் (குளிரைச் சகித்துக்கொண்டு) முழந்தாளில் மோவாயை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறான். கைத்தலத்தில் பிச்சை வாங்கி உண்கிறான்; மரத்தடியில் வசிக்கிறான்; என்றாலும் ஆசைப் பிணிப்பு விடவில்லை.

**விளக்கவுரை :—**

'அறுமின், அறுமின் ஆசை அறுமின்''
ஈசனோடாயினும் ஆசை அறுமின்'

என்பது பெரியோர் வாக்கு.

அதன்படி, உலகப்பொருள்கள் மீது மக்களுக்கு உள்ள ஆசைகளும், பந்தங்களும் அவர்களை துன்பத்தில் ஆழ்த்துகிறது.

இந் ஸ்லோகத்தில் கூறியுள்ளபடி, முற்றும் துறந்த முனிவர்களுக்கும் கூட ஆசைகள் விட்ட பாடில்லே. அப்படியிருக்க, நாம் ஆசைகளிலிருந்து விடுபடுவது என்பது மிகவும் கடினமான காரியம்.

நமது ஆசைகள் கற்பனையான மனதிலிருந்தே தோன்றுகின்றன. குறிப்பாக கூறினல், நமது ஆசைகளின் தொகுப்புத்தான் நமது மனம். ஆதலால், மனதை ஒழித்தால், அல்லது மனதை அடக்கினல், ஆசைகள் தாமாகவே அழிந்துவிடும். அதற்கு உற்ற ஒரே உபாயம் ''மனதை உலகப் பொருள்களிலிருந்தும், உற்ருர் உறவினர்களிடமிருந்தும் நீக்கி, இறைவன்பால் நாட்டம் கொள்ள பழக வேண்டும்''.

மனிதனுக்குள் மறைந்திருக்கும் சக்திகள் மகத்தானது. அதன் காரணமாக அவன் பல சாதனேகளை புரிந்திருக்கிருன். ஆயினும் அவனுக்கு மனதை அடக்கும் மார்க்கங்கள் மட்டும் தெரியவில்லே. அதனல் பலவிதமான ஆசைகளுக்கு அடிமையாகி, கஷ்டங்களை அனுபவிக்கிருன். மனிதனுடைய மனதில் ஆசைகள் தோன்றும்போது, அவனுடைய சக்திகள் சிதறுண்டு போவதால், அவனல் உயர்ந்த சாதனேகளை ஆற்ற முடிவதில்லே. ஆசைகளை அடக்கி, மனதை கட்டுப்படுத்தியவர்கள்தான் பெரிய சாதனேகளை புரிந்தவர்களாக கருதப்படுகிருர்கள்.

முற்றும் துறந்த முனிவர்களான தாயுமானவ சுவாமிகள், பட்டினத்து அடிகள், இராமலிங்க வள்ளலார் போன்ற அருளாளர்கள் மனதை கட்டுப்படுத்தவும், மனதற்ற நிலேயை அருளவும், இறைவனிடம் மீண்டும், மீண்டும் வேண்டிக் கொண்டிருக்கிருர்கள்.

அதனால் தான் தெய்வப்புலவர் திருவள்ளுவர் அவர்களும்,

''யாதனின் யாதனின் நீங்கியான்-நோதல்
அதனின் அதனின் இலன்'' – என்று

திருக்குறளில் கூறுகிறார்கள். அதாவது, மனிதன் எந்தெந்தப் பொருள்களில் ஆசைகளை விடுகிறானோ, அந்தந்தப் பொருள்களிலிருந்து விடுதலை அடைகிறான் என்று கூறுகிறார். அத்துடன், 'ஒரு பற்றும் இல்லாமல் வாழ்வதே சிறந்த தவம் செய்வதற்கு ஒப்பாகும்' என்றும் கூறுகிறார்.

நாமும், நமது எண்ணங்களை கட்டுப்படுத்தி, மனதை இறைவன்பால் செலுத்தி, தியானங்கள் செய்தும், பஜனைகள் பாடியும், மனதற்ற நிலையை அடைய முயற்சி செய்யவேண்டும் என்று இந்த 16வது ஸ்லோகம் விளக்குகிறது.

---

உலகத்தவர் போகங்களை அனுபவித்துப் பார்த்து அவைகள் தீங்கு விளைவிப்பவைகள் என்னும் அருவருப்பு அவர்களுக்கு வரும் பொழுது வைராக்கியமும் வருகிறது.

— ஸ்ரீராமகிருஷ்ணர்

## ஸ்லோகம்-17.

# ஞானமில்லாமல் மோட்சமில்லை.

---

*வார்த்திககாரர் கூறியது:*

குருதே கங்கா-ஸாகர-கமனம்
வ்ரதபரிபாலன-மதவா தானம்
ஜ்ஞானவிஹீந: ஸர்வமதேன
முக்திம் பஜதி ந ஜன்மசதேன

*கருத்துரை —*

*கங்கை சேது சமுத்திரம் முதலிய இடங்களுக்குத் தீர்த்த யாத்திரை செய்கிறான். (அல்லது கங்கை சமுத்திரத்தில் சேரும் இடமான கங்கா ஸாகரம் என்னும் தீர்த்தத்திற்குச் செல்கிறான்); விரதங்களைக் கைக்கொள்ளுகிறான், அல்லது தானங்களைச் செய்கிறான்; ஞானமில்லாதவன் நூறு ஜன்மங்களிலும் முக்தியை அடையமாட்டான் என்பதுதான் எல்லா மதங்களுடைய கொள்கையும்.*

**விளக்கவுரை :—**

*நாம் வாழ்க்கையின் நெறி முறைகளை நன்கு தெரிந்து கொண்டு, அதன்படி இயற்கையின் நியதிகளை அனுசரித்து நடக்காதவரையில், ஆடம்பரமான பூஜைகள் செய்வதாலும், பஜனைகள் பாடுவதாலும், யாகங்கள் செய்வதாலும் மட்டுமே ஞானத்தையோ, முக்தியையோ அடைந்துவிட முடியாது. இதே கருத்தை பகவத்கீதை, 2வது அத்தியாயம்,*

46வது ஸ்லோகத்தில், 'ஆன்மாவைப்பற்றி உண்மையை அறிந்த ஞானிக்கு, வேதங்களில் சொல்லப்பட்ட கருமங்களும், அவற்றின் பலன்களும் உபயோகமற்றவை' என்று கூறுகிறது.

ஒரு மாணவன் பரிட்சையில் தேறவேண்டுமானால், நன்றாக படித்தால்தான் தேற முடியுமே தவிர, பிள்ளையாருக்கு தேங்காய் உடைப்பதால் மட்டுமே தேறமுடியாது.

ஒரு நோயாளியின் பிணி தீர வேண்டுமானால், நல்ல மருத்துவரிடம் ஆலோசனை கேட்டு, தக்க சிகிச்சை செய்தால்தான் உடல் குணம் அடையுமே தவிர மந்திரத்தாலும், தாயத்து கட்டுவதால் மட்டும் குணமடையாது. ஒரு நீதி மன்றத்தில் வழக்கு வெற்றிபெற வேண்டுமானால், சிறந்த வழக்கறிஞரை நாடி, அவரிடம் அது சம்பந்தமான முழு உண்மைகளையும் கூறி, அவர் மூலமாக தக்க சட்ட நுணுக்கங்களை, நீதி மன்றத்தில் விவாதிப்பதால் மட்டுமே வெற்றி கிட்டும் அதை விட்டு கோவில் உண்டியலில் பணம் போடுவதாலோ, வேறு தான, தருமங்கள் செய்வதாலோ, வழக்குகளில் வெற்றி அடைய முடியாது.

ஒரு வியாபாரி தனது வியாபாரத்தில் நீடித்து நிலைபெற வேண்டுமானல, வாடிக்கையாளர்களிடம் நேர்மை, பணிவு, நியாயமான விலை முதலிய பண்பாடுகளை கடைப்பிடிக்க வேண்டுமேயன்றி பகட்டான விளம்பரங்களாலும், ஏமாற்று வேலைகளாலும் முன்னேற முடியாது.

ஒரு நாடு முன்னேற்றமடைய வேண்டுமானால், தக்க திறமையும், நேர்மையும் உள்ள தலைவர்கள்

காட்டும் வழியில் சென்று உழைப்பினுல் உற்பத்தியை பெருக்கி, தரத்தில் உயர்ந்தால்தான் சுபிட்சமடைய முடியும். மற்ற எந்தவிதமான தந்திரங்களும் பலனளிக்காது.

அதே மாதிரி மக்கள் ஞானத்தின் உதவியினுல் ஆன்மாவை உணராமல், குறுக்கு வழியில் முக்தியை அடைய முடியாது ' என்று, 'பஜகோவிந்தம்', 17-வது ஸ்லோகம் தெளிவுபடுத்துகிறது.

---

## தெய்வீக வாழ்க்கை

மக்கள் பெரும்பாலும் உடலிலேயே வாழுகிருர்கள். பலர் அறிவில் வாழுகிருர்கள். ஒரு சிலரே உள்ளத்தில் வாழுகிருர்கள். உள்ளத்தில் உறைபவர்கள்தான் அமைதியாக வாழ முடியும். உள்ளத்தில் வாழ்வதே தெய்வீக வாழ்க்கை.

—ஆசிரியர்.

## ஸ்லோகம்—18

## வைராக்கியம்

*ஸ்ரீ நித்யானந்தர் கூறியது :*

ஸுரமந்திர-தருமூல-நிவாஸ:
சய்யா பூதல-மஜினம் வாஸ:
சர்வ-பரிக்ரஹ-போக-த்யாக:
கஸ்ய ஸுகம் ந கரோதி விராக:

**ருத் ரை :—**

தேவாலயங்களின் அருகிலுள்ள மரங்களின் அடியில் வாசம் ; படுக்கை மண்தரை ; உடை தோல் ; எல்லா உடைமைகளையும், எல்லா போகங்களையும் துறத்தல் ; இப்படிப்பட்ட வைராக்கியம் யாருக்குத்தான் சுகத்தை அளிக்காது?

**விளக்கவுரை :—**

மக்களுக்கு உண்மையான ஆனந்தத்தை கொடுக்க வல்லது 'வைராக்கியம்'. உலகில் சாம்ராஜ்யங்கள் அழிந்ததையும், சக்கரவர்த்திகள்கூட துயரங்களுக்கு உள்ளானதையும், எல்லா வசதிகள் உள்ளவர்களும் சில சமயங்களில் தொல்லைகளுக்கு ஆளாவதையும், சக்தி மிக்கவர்களும், கவலைகள் நிறைந்தவர்களாக இருப்பதையும், பலசாதனைகளை புரிந்தவர்களும், பொறாமையினால் மகிழ்ச்சியும், மன நிறைவும் இல்லாதவர்களாக தவித்துக் கொண்டிருப்பதையும் காண்கிறோம்.

நமது அறியாமையினால் நாம் பலவிதமான பசிகளை வளர்த்துக் கொள்ளுவதால் துன்பங்

களுக்கு ஆளாக நேரிடுகிறது. நமது துன்பங்களுக்குக் காரணமாக இருக்கும் மனதையும், அதில் எழும் ஆசைகளையும் அடக்கி, அதனால் கிடைக்கும் அற்பசுகங்களைத் 'தேவையில்லை' என்று ஒதுக்கித் தள்ளும் திடசித்தம் கொண்டவர்கள்தான் உண்மையான மகிழ்ச்சியை அடைய முடியும். அம்மாதிரி சித்தர்களுக்கு வாழ்க்கையில் தேவைகளோ அல்லது 'இல்லை' என்ற குறைகளோ இல்லாமல் எப்போதும் தன்னிலேயே நிறைவு கொண்டு, தனக்குள்ளேயே, வெகு ஆழத்தில் 'உண்மையான திருப்தி' என்னும் வற்றாத ஆனந்த ஊற்று இருப்பதைக் கண்டு, அதை அனுபவித்து, எப்போதும் மகிழ்ச்சியுடன் இருந்து ஆனந்தத்தில் திளைத்திருக்கிறார்கள். அவர்களுக்கு வீடு, வாகனங்கள், உடைகள் முதலிய பகட்டுக்களில் நாட்டம் உண்டாவதில்லை.

அம்மாதிரி ஆசைகளற்ற துறவு நிலையை அடைய மனதை பயிற்றுவிக்கும் பயிற்சியே 'வைராக்கியம்' எனப்படும்.

வைராக்கியத்தில் பலவகை உண்டு. அவைகளில் குறிப்பாக மயான வைராக்கியம், பிரசவ வைராக்கியம் என்று கூறப்படும். வைராக்கியங்கள் நீடித்து நிற்பதில்லை. ஏனெனில், அவை போலியானவை. அம்மாதிரி இல்லாமல் உண்மையாகவே ஆசைகள் அற்றவர்களாகவும், எளிமையாகவும் வாழ்பவர்களுக்கு வாழ்க்கையில் எந்தவிதமான பிரச்சனைகளும் ஏற்படுவதில்லை. அதனால், அவர்கள் வைராக்கியத்துடன் பிரம்மத்தில் நிலைத்திருந்து ஆனந்தத்தை அடைகிறார்கள் என்று இந்த 18வது ஸ்லோகம் கூறுகிறது.

---

## ஸ்லோகம்-19

## சுகமும் துக்கமும்

---

*ஸ்ரீ ஆனந்தகிரி கூறியது*

யோக-ரதோ வா போக-ரதோ வா
ஸங்க-ரதோ வா ஸங்க-விஹீன:
யஸ்ய ப்ரஹ்மணி ரமதே சித்தம்
நந்ததி நந்ததி நந்தத்யேவ

**ருத்துரை :—**

யோகத்தில் மகிழ்பவனாக இருந்தாலும், போகத்தில் மகிழ்பவனாக இருந்தாலும், கூட்டுறவில் மகிழ்பவனாக இருந்தாலும், தனிமையில் மகிழ் பவனாக இருந்தாலும் எவனுடைய மனது பிரம்மத்தில் மகிழ்கின்றதோ அவன் மகிழ்கிறான், அவன் மகிழ்கிறான் அவனே மகிழ்கிறான்.

**விளக்கவுரை :—**

ஒரே நாளில் பாதி பகலாகவும், பாதி இரவாக வும் இருப்பதைப்போல், மனித வாழ்க்கையில் சுகமும், துக்கமும், மாறி மாறி வந்துகொண்டே இருக்கிறது. சுகத்தின் முடிவு துக்கத்திலும், துக்கத்தின் முடிவு சுகத்திலுமாகவே இருக்கிறது. வாழ்க்கையில் சுகமும், துக்கமும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் போல் பிரிக்க முடியாததாக இருக்கிறது.

மக்கள் சுகத்தை விரும்பவும், துக்கத்தை வெறுக்கவும் செய்கிறார்கள். மனிதன் துக்கத்தைக் கண்டு பயப்படவோ அல்லது சோர்வு அடையவோ கூடாது.

நாம் சுகம் என்றும், துக்கம் என்றும் அனுபவிப்பது நமது மனதின் பிரதிபலிப்பே அன்றி உண்மையானவை அல்ல. கற்பனையான மனதிலிருந்து எழும் உணர்வுகளே நமக்கு சந்தோஷத்தையும், கவலைகளையும் உண்டாக்குகிறது.

நாய் எலும்புகளைக் கடிக்கும்போது, அதனுடைய வாயிலிருந்து வரும் இரத்தத்தையே சுவைத்து மகிழ்கிறது. அதேமாதிரி மது அருந்துபவர்கள் போதையினால் கவலைகளை மறந்து தற்காலிகமாக ஆனந்தம் அடைகிறார்கள்.

உலகப் பொருள்களிலிருந்து கிடைக்கும் சுகம் நீடித்த ஆனந்தத்தையோ மனதிற்கு அமைதியையோ உண்டாக்குவதில்லை. அத்துடன் மக்கள் ஆலயங்களுக்கு சென்றும், கூட்டுவழிபாடுகள் செய்தும், பஜனைகள் பாடியும், தான தருமங்கள் செய்வதிலும் ஆனந்தம் அடைகிறார்கள். இம் மாதிரியான நல்ல காரியங்கள் எல்லாம் இறைவனை அடையும் உபாயங்களே அன்றி இவைகளே வாழ்க்கையின் முடிந்த முடிவு அல்ல. அதனால்தான் அம் மாதிரி நல்ல மக்களுக்கும் கூட ஏமாற்றம் ஏற்படுகிறது.

உடலுக்கு எவ்வளவு சுகம் இருந்தாலும் உள்ளத்தில் அமைதி இல்லாதவரை அந்த வாழ்வு நரகமாகத்தான் இருக்கும். இந்த உண்மையை உணர்ந்த ஞானிகள் உலகப்பற்றுக்களை அறவே ஒழித்து, எப்போதும் நீடித்த இறை உணர்வில்

திளைத்து நின்று, அழியாத ஆனந்தத்தை அனுபவிக்கிறார்கள்.

மனதை அமைதிப்படுத்தி, இறைவனை உள்ளத்தில் உணரும் அனுபவம்தான், உண்மையான ஆனந்தத்தைக் கொடுக்கும் என்னும் கருத்தை இந்த 19-வது ஸ்லோகம் தெளிவாக விளக்குகிறது.



அழியாத ஆனந்தத்தை அடைய விரும்புகிறவர்கள் ஆரம்பகாலத்தில் இறைவனைப்பற்றிய விஷயங்களைப் பற்றி படிக்கவும், கேட்கவும் வேண்டும். இரண்டாவது படித்தரத்தில், ஜபம், தியானம், ஸ்தோத்திரம், பஜனை முதலியவைகளை செய்து மகிழவேண்டும். மூன்றாவது படித்தரத்தில் அவன் பகவானை தனது அந்தராத்மாவாக உணர வேண்டும். ஒப்பற்ற நான்காம் படித்தரத்தில், எங்கும் நிறைந்துள்ள பிரப்பிரம்மத்திற்கும், அவனுக்கும் இடையே உள்ள மாறாத பேரிணக்கத்தை உறுதிப்படுத்தி, அந்த ஆனந்தத்திலேயே திளைத்திருக்க வேண்டும். இதுவே உண்மையானதும், "நிலையானதுமான பேரின்பம்" என்று பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறுகிறார்.

## ஸ்லோகம்-20.

# கீதையின் பெருமை

ஸ்ரீ த்ருடபக்தர் கூறியது.

பகவத்கீதா கிஞ்சிததீதா
கங்காஜல-லவ-கணிகா-பீதா
ஸத்ருதபி யேந முராரி ஸமர்ச்சா
க்ரியதே தேனயமேன ந சர்ச்சா

**ருத்துரை :—**

எவனால் பகவத் கீதை சிறிதேனும் படிக்கப் பட்டதோ, கங்கா தீர்த்தம் துளியேனும் பருகப் பட்டதோ, விஷ்ணுவின் அர்ச்சனை ஒரு தடவை யேனும் செய்யப்பட்டதோ, அவனால் யமனுடன் சச்சரவு செய்யப்படுவதில்லை.

**விளக்கவுரை :—**

மனிதனுக்கு ஸ்தூல உடல் என்றும், அறிவு உடல் என்றும், ஆன்ம உடல் என்றும் மூன்று பகுதிகள் இருக்கிறது. நமது ஸ்தூல உடலை சத்துள்ள உணவின் மூலமாகவும், அறிவு சரீரத்தை நல்ல நூல்களை படித்தும், நமது ஆன்ம சரீரத்தை இறைவனை நினைத்து தியானம் செய்தும், பஜனைகள் பாடியும் வளம் பெறச் செய்யலாம்.

கங்கை நதியின் ஜலம் புனிதமானது. மக்களுடைய பாபங்களை போக்க வல்லது. கங்கையில்

நீராடுவதால், உடலின் வெளிப்புறமும், கங்கை ஜலத்தை பருகுவதால் உடலின் உள் உறுப்புக் களும் பரிசுத்தமடைவதாக விஞ்ஞான பூர்வமாக கண்டு அறியப்பட்டிருக்கிறது.

அதே மாதிரி கீதையைப் படிப்பதால், அறிவுத் தெளிவும், ஆன்ம உணர்வும் உண்டாகிறது. பகவத் கீதை 8வது அத்தியாயம், 5வது ஸ்லோ கத்தில், 'எவனொருவன் இறுதிக்காலத்திலேனும் என்னை நினைத்தப்படி உயிரை விடுகிறானோ, அவன் பிறவிப் பிணியிலிருந்து விடுதலை அடைகிறான். இதில் சந்தேகமே இல்லை' என்று பகவான் கூறுகிறார்.

நமது இறுதிக் காலத்தில், நமக்கு இறைவ னுடைய சிந்தனை ஏற்பட வேண்டுமானால், நாம் திடகாத்திரர்களாக வாழ்ந்து கொண்டிருக்கும் போதே அதற்கு தக்க பயிற்சி அளிக்க வேண்டும். அம்மாதிரி மனதை இறைவன்பால் செலுத்தி, பயிற்சி அளிக்க உதவுவது விஷ்ணு சகஸ்ரநாமம். ஆதலால், 'விஷ்ணு சகஸ்ரநாமம் பாராயணம் செய்பவர்கள் எப்போதும் இறைவனையே சிந்தித்துக் கொண்டிருப்பதால், அவர்களுக்கு எந்த நேரத் திலும் எமபயம் ஏற்படுவதில்லை. அதனால், அவர் கள் எமனுடன் போராட வேண்டிய அவசியமும் ஏற்படுவதில்லை' என்று இந்த 20வது ஸ்லோகம் விளக்கிக்கூறுகிறது.



## ஸ்லோகம்—21.

## வாழ்க்கைச் சுழல்

*நித்யநாதர் கூறியது*

புனரபி ஜனனம் புனரபி மரணம்
புனரபி ஜனனீ—ஜடரே சயனம் !
இஹ ஸம்ஸாரே பஹுதுஸ்தாரே
க்ருபயாऽபாரே பாஹி முராரே

**குத்துரை :—**

*ஹே ! பகவானே ! கரையில்லாததும், கடத்தற்கரியதுமான இந்த சம்சாரமாகிய சமுத்திரத்தில் நான் மறுபடியும் பிறந்து, மறுபடியும் இறந்து, மறுபடியும் தாயின் வயிற்றில் தங்கி, பிறந்து முடிவில்லாத 'பிறத்தல்', 'இறத்தல்' ஆகிய சூழலில் சிக்கியிருக்கிறேன். முராரியே ! நீதான் கருணை கூர்ந்து என்னை கரை சேர்க்க வேண்டும்.*

**விளக்கவுரை :—**

*நமது 'பிறப்பு! 'இறப்பு' சுழலின் இறுதியில் அடைய வேண்டிய நிலையே 'முக்தி' எனப்படுவது.*

*''நம்முடைய இந்த வாழ்க்கை நமது மரணத்துடன் முடிந்துவிடுவதில்லை. நாம் இந்தப் பிறவியில் செய்யும் கருமங்களுக்கு ஏற்றவாறு நமது அடுத்தபிறவி மேலானதாகவோ, அல்லது கீழான தாகவோ அமைகிறது'' என்று கீதையில் பகவான் கூறுகிறார். ஒரு மாணவன் பள்ளியில் படிக்கும் போது ஒவ்வொரு வருடமும், ஒரு வகுப்பில்*

படித்து, ஆண்டு இறுதியில் தேர்வு பெற்று அதற்கு அடுத்த வகுப்பிற்கு சென்று, படிப்படியாக முன்னேறி இறுதியில், பள்ளியிலிருந்து, அறிவாளி யாக வெளியேறி விடுகிருன். அதே மாதிரி, நமது ஜீவனுகிய ஆன்மாவும் ஒவ்வொரு பிறவியிலும் முன்னேற்றம் அடைந்து பல பிறவிகளுக்குப் பிறகு பூரண நிலையை அடையும்போது பரமாத்மாவுடன் கலந்துவிடுகிறது. இதுவே 'முக்தி' என்று கூறப்படுகிறது.

பலகோடி ஆண்டுகளுக்குமுன், கல்லாகவும், மண்ணுகவும் இருந்து, அதன் பிறகு புல்லாகவும், மரமாகவும் மாறி, பரிணும வளர்ச்சியின் காரண மாக மீனுகவும், பட்சிகளாகவும், மிருகங்களாகவும் இருந்து படிப்படியாக உயர்ந்து, பல பிறவிகளுக்குப் பிறகு நமது மனித சரீரத்தைப் பெற்றிருக்கிறோம்.

இந்த நிலையை நாம் நமது முயற்சியினுல் அடைந்துவிடவில்லை. இயற்கை நமக்கு இதுவரை உதவியிருக்கிறது. இந்த நிலை இத்துடன் முற்றுப் பெறுவதில்லை. நாம் இன்னும் அநேக பிறவிகள் எடுத்து, இறுதிநிலையாகிய 'முக்தி' அல்லது 'பிரம்ம நிலையை' அடைய வேண்டியிருக்கிறது. அதற்கு ஒவ்வொரு பிறவியிலும் நம்மை நாமே உயர்த்திக் கொள்ளவேண்டியது நமது கடமை. அவ்வாறு முயற்சி செய்யாமல், மிருகங்களைப்போல் கடமைகளை உணராமல் வாழ்ந்து வாழ்க்கையில் முன்னேற்றம் அடையாமல் நமது பிறவியை வீணுன தாக செய்வது விவேகமற்ற செயலாகும்.

அழிவற்ற ஆன்மா, அழியும் தன்மையான உடலுடன் சேர்ந்து, உலகில் ஜீவனுக ஜனிப்பதை 'பிறப்பு' என்று கூறுகிறோம். அந்த 'ஆன்மா'

உடலில் ஒட்டிக்கொண்டு இருக்கும்வரை அந்த உடல் ஒவ்வொரு விஞடியும், மாறிக்கொண்டே யிருப்பதை ''வளர்கிறது'' என்று கூறுகிறோம். இந்த உலகில் வாழும் சகல ஜீவராசிகளும், ஒவ் வொரு விஞடியும் வளர்ந்து கொண்டேயிருக் கின்றன. ஆனல், அவை ஒரு நிலேயில் வளர்வது தடைப்பட்டு, அழிய ஆரம்பிக்கிறது. இறுதியில், ''ஆன்மா'' அந்த உடலில் இருந்து பிரிந்து, வேறு உடலில் புகுந்துகொள்ளும்போது, பழைய உடல் பூரணமாக அழிந்துவிடுகிறது. இதையே நாம் 'மரணம்' என்று கூறுகிறோம்.

பழைய உடல்கள் அழிவதால்தான் புது ஜீவன்கள் தோன்றுவதற்கு வழி உண்டாகிறது. ஒரு வித்து மடியும் போதுதான் அதனுள் இருக்கும் விருட்சம் வெளிப்பட வாய்ப்பு ஏற்படுகிறது. வித்து மடியாமல், வித்தாக இருக்கும்வரை அதனுள் இருக்கும் விருட்சம் அல்லது மரம் வெளிப்படுவதில்லே. இதுவே இயற்கையின் அற்புதம்.

இந்த உலகத்திலுள்ள பழைய ஜீவன்கள் அழிந்து கொண்டே இருப்பதால்தான் புது ஜீவன் கள் தோன்றி உலகம் எப்போதும் புதுப் பொலி வுடன் திகழ்ந்து கொண்டிருக்கிறது. இதுவே, 'பிறப்பு', 'இறப்பு'க்களின் இரகசியம்.

இதே கருத்தை, 'பகவத் கீதையில்' 2-வது அத்தியாயம், 13-வது ஸ்லோகத்தில், 'உடலில் உறையும் ஆன்மாவிற்கு இவ்வுடலில் ஏற்படும் குழந்தைப் பருவம், இளமை, மூப்பு முதலிய மாறுதல்கள் ஏற்படுகிற மாதிரியே அது வளர்ந்து, இறுதியில் அழிந்து, அதனுள் இருக்கும், 'ஆன்மா'

வேறு உடலை அடைவதும் ஆகும். அந்த மாற்றத்தினால் ஞானிகள் கலங்குவதில்லை' என்று பகவான் கூறுகிறார்.

அத்துடன் 27வது ஸ்லோகத்தில், 'பிறந்தவன் இறப்பது திண்ணம். இறந்தவன் மறுபடியும் பிறப்பது நிச்சயம்' என்று கூறுகிறார்.

அதன்படி நாமும் ஒவ்வொரு பிறப்பிலும் நம்மை நாமே உயர்த்திக் கொண்டு சீக்கிரமாக நமது பிறவிப் பிணியிலிருந்து விடுதலை அடைய வேண்டும். அதற்கு உற்ற உபாயம் 'இறைவனை சரணடைவதை விட வேறில்லை'' என்பதை இந்த 21வது ஸ்லோகம் விளக்குகிறது.



## ஸ்லோகம்—22.

## பாலனும், பித்தனும்.

யோகானந்தர் கூறியது:

ரத்யா கர்ப்பட-விரசித-கந்த:
புண்யா-புண்ய-விவர்ஜித-பந்த:
யோகீ யோகநியோஜித-சித்தோ
ரமதே பாலோன்மத்த வதேவ

**கருத்துரை :—**

வழியில் கிடக்கும் கந்தைத் துணிகளால் ஆக்கப்பட்ட ஆடை உடையவனுகவும், யோகத்தில் நிறுத்தப்பட்ட சித்தம் உடையவனுகவும் உள்ள யோகி பாலனைப் போலும், பித்தனைப் போலும் மகிழ்ச்சி நிறைந்தவனுயிருப்பான்.

**விளக்கவுரை :—**

மக்களுடைய வாழ்க்கையில், அவர்களுடைய பால பருவமே மகிழ்ச்சி நிறைந்ததாக இருக்கிறது. அவர்களுடைய மனதில் கள்ளம், கபடம், இல்லாதவர்களாக இருப்பதால், எப்போதும் அமைதியாகவும், மகிழ்ச்சியாகவும் இருக்க முடிகிறது. அதே மாதிரி, சித்த சுவாதீனம் இல்லாதவர்களும், கவலையற்றவர்களாக இருக்கிறார்கள். பாலர்களுக்கும், பித்தர்களுக்கும் கடந்த காலத்தைப் பற்றிய கவலைகளோ, அல்லது எதிர்காலத்தைப் பற்றிய திட்டங்களோ இருப்பதில்லை. அதனுல், அவர்கள் எப்போதும் நிகழ்காலத்

திலேயே வாழ்ந்து கொண்டிருப்பதால், அவர்களுக்கு பிரச்சனைகள் ஏற்படுவதில்லை.

சிவபெருமானையும் 'பித்தன்' என்று கூறுவதுண்டு. ஏனெனில் அவர் உலக போகங்களையும், ஆடம்பர வாழ்க்கையையும் விட்டு, மயானத்தில் வாசம் செய்து கொண்டு வாழ்ந்தார். ஆபரணங்களுக்கு பதிலாக பாம்புகளை அணிகலன்களாக அணிந்து கொண்டார். வாசனை திரவியங்களுக்கு பதிலாக சுடலை சாம்பலை உடலில் பூசிக் கொண்டார்.

நம்மால் அவ்வாறு வாழ முடிவதில்லை. ஏனெனில், நமக்கு பலவிதமான தேவைகளும், திட்டங்களும் உள்ளன. அதனால், நாம் அநேக உலக பந்தங்களில் சிக்கிக்கொண்டு, பலவிதமான பிரச்சனைகளை வளர்த்துக் கொண்டு, அமைதி இல்லாத வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கிறோம். நமக்கு ஆனந்தத்தை உண்டாக்கும் என்று எண்ணி சேர்த்து வைத்த பொருள்கள் இறுதியில் நமக்கு ஏமாற்றத்தையே உண்டாக்குகிறது. உலகப் பொருள்களை வைத்திருப்பவர்களுக்கு மனதில் பலவிதமான பயமும் இருந்து கொண்டு அவர்களை நிம்மதியாக வாழவிடுவதில்லை.

பாலர்கள், நம்மைப்போல் உலக அனுபவத்தின் நன்மை, தீமைகளை உணராதவர்களாக இருப்பதால், அவர்களுக்கு வாழ்க்கையில் எந்த விதமான கவலைகளும் இருப்பதில்லை. அதே மாதிரி, பித்தர்களுக்கும் எந்தவிதமான கற்பனைகளோ அல்லது திட்டங்களோ கிடையாது அத்துடன் அவர்களுடைய பொறுப்புக்களை உணர இயலாதவர்களாகவும் இருப்பதால் அவர்களும் கவலையற்று வாழ்கின்றனர்.

யோகிகளும், சித்தர்களும் இறைவனுடைய திட்டங்களையும், இயற்கையின் நடைமுறைகளையும் நன்கு அறிந்து, தெளிவு அடைந்தவர்களாக இருப்பதால், எந்தவிதமான திட்டங்களும் இல்லாமல் அவர்களுடைய முழுமனதையும் இறைவன்பால் வைத்து சரணடைந்து, கவலையற்றவர்களாக எப்போதும் மகிழ்ச்சியுடன் இருப்பார்கள். அதனுல்தான் பாலர்களும், பித்தர்களும், யோகிகளும் உலக சட்டதிட்டங்களுக்கு கட்டுப்படாதவர்களாக வாழ்கிருர்கள்.

உலகில் நடைபெறும் காரியங்களுக்கு நம்மையே கர்த்தாவாக எண்ணுவதால் வெற்றியில் மகிழ்ச்சியும் தோல்வியில் சோர்வும் உண்டாகிறது.

''எல்லாம் அவன் செயல்
என்னுல் ஆவது ஒன்றுமில்லை''

என்பதை உணர்ந்து காரியங்களை கடமையாகவும், கருவியாகவும் செய்பவர்கள் வெற்றி தோல்விகளினுல் பாதிக்கப்படுவதில்லை என்று கீதை கூறுகிறது.

நமது உடலின் மீதும், உலகப் பொருள்கள் மீதும் நமக்கு உள்ள ப்ற்றுதலும், பந்தமும்தான் நமது கஷ்டங்களுக்கும் துன்பங்களுக்கும் காரணமாகயிருக்கிறது. ஆதலால், மனதில் கற்பனையாக எழும் ஆசைகளை அகற்றி, எளிமையாக வாழ பழகிக்கொண்டால் நாமும் பாலர்களைப் போல மகிழ்ச்சியாக கவலையற்று வாழலாம். என்று இந்த 22வது ஸ்லோகம் விளக்குகிறது.



## ஸ்லோகம்–23

## சம்சார வாழ்க்கை சாரமற்றது.

---

*ஸ்ரீ சுரேந்திரர் கூறியது :*

கஸ்த்வம் கோ஽ஹம் குத ஆயாத:
கா மே ஜனனீ கோ மே தாத:
இதி பரிபாவய ஸர்வ-மஸாரம்
விச்வம் த்யக்த்வா ஸ்வப்ன-விசாரம்

**ருத்  ரை :—**

நீ யார்? நான் யார்? எங்கிருந்து வந்தேன்? என் தாய் யார்? என் தந்தை யார்? என்று இவ்வாறு எண்ணி, உலகனைத்தும் ''ஸாரமற்றது'' என்றும், ''கனவிற் கொப்பானது'' என்றும் துறந்து அலட்சியம் செய்வாயாக.

**விளக்கவுரை —**

பகவத்கீதை, ஏழாவது அத்தியாயம், மூன்ருவது ஸ்லோகத்தில், 'உலகில் உள்ள கோடிக்கணக்கான மக்களில், ஒரு சிலரே என்னுடைய உண்மையான நிலையை அறிந்துகொள்ள முயற்சி செய்கிருர்கள். அப்படி முயல்வாருள் எவனே ஒருவனுக்குத்தான் என்னைப்பற்றி உள்ளபடி உணர்ந்துகொள்ள முடிகிறது. அவர்களே உண்மையான ஞானிகள்' என்று பகவான் கூறுகிருர்.

அத்துடன் அடுத்த நான்காவது ஸ்லோகத்தில், 'உலகில் உள்ள சகல பொருள்களும் அனைத்து ஜீவ ராசிகளும், பஞ்சபூதங்களின் மாறுபட்ட சேர்க்கையினுல் ஆனவை' என்றும் கூறுகிருர்.

அதன்படி நமது உடலும், மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாசம் என்னும் பஞ்சபூதங்களாலும், மனம், புத்தி, அகங்காரம், முக்குணங்கள் முதலிய அந்தகரணங்களாலும் உண்டாக்கப்பட்டிருக்கிறது.

பஞ்சபூதங்களில் தரத்தில் குறைந்தது மண், அதைவிடச் சிறந்தது நீர், அதைவிட நெருப்பும், நெருப்பைவிட காற்றும், காற்றைவிட ஆகாசமும் தரத்தில் சிறந்தவைகளாக இருக்கின்றன. இவைகளை இறைவனுடைய 'கீழ் இயற்கை' என்றும், அதை இயக்கும் சக்தியான, உயிர் அல்லது ஆன்மாவை, 'மேல் இயற்கை' என்றும், அதாவது தரத்தில் உயர்ந்தது என்றும் பகவத் கீதையில், ஏழாவது அத்தியாயம், ஐந்தாவது ஸ்லோகத்தில் பகவான் கூறுகிறார்.

நமது பஞ்சபூதங்களால் ஆன உடல் அழியும் தன்மையானது. அதனால் ஒவ்வொரு விநாடியும் மாறிக்கொண்டே இருக்கிறது. இறுதியில் ஒரு நாள் முற்றிலும் அழிந்து, பஞ்சபூதங்களாக மாறிவிடுகிறது. ஆனால், நமது ஆன்மா அழிவற்றது, அந்த ஆன்மா உடலில் இருக்கும் வரையில்தான் நமது பெயரையும், பட்டங்களையும், உறவுகளையும், கொண்டாட முடியும். ஆன்மா உடலை விட்டு அகன்ற பிறகு, அதை 'உடல்' என்றுதான் கூறப்படுகிறது. அந்த சரீரத்தையும் உடனே அகற்றி அழித்துவிட வேண்டும். இல்லாதவரை அது மற்றவர்களுக்கும் கேடு விளைவிக்கும். உடல் அழியும் போது, அதிலுள்ள பஞ்சபூதங்களும் படிப்படியாக ஆகாசம், காற்று, நெருப்பு, நீர், மண் என்று மீண்டும் மாறி அதனதனுடன் கலந்துவிடுகிறது. இதுவே நமது வாழ்க்கை.

நமது பிறவி இயற்கையாகவே ஏற்பட்டதே அன்றி நாமாக நமது முயற்சினுல் இந்த உலகில் வந்து பிறந்துவிடவில்லே. அதே மாதிரி, நமது பெற்ருேர்களும், நம்மை உண்டாக்க வேண்டும் என்று திட்டமிட்டு நம்மை பெறவில்லே. இந்த உலகில் பிறந்துள்ள எல்லோருமே இறைவனுடைய கைப்பாவைகளாகத்தான் இங்கு பிறந்து இயங்கிக் கொண்டிருக்கிருேம்.

நாம் பிறக்கும்போது ஒன்றுமே தெரியாத ஜடங்களாகத்தான், உலகில் பிறக்கிருேம். நாம் வளரவளர பலவிதமான முயற்சிகள் செய்து, கல்வி, இசை, விஞ்ஞானம் முதலிய அறிவுகளேயும், கலேகளேயும், கற்றுத் தெரிந்துகொள்ளுகிருேம். அதற்குள் நமது வாழ்க்கையில் பெரும் பகுதி முடிந்துவிடுகிறது ஒரு சிலர் ஆன்மாவை உணர முயற்சி செய்கிருர்கள்.

நமது அறிவும், அனுபவங்களும் மற்றவர் களுக்கு பயன்பட ஆரம்பிக்கும் நிலேயில், நமது ஆயுளும் முடிந்துவிடுகிறது. காலன் நம்மை அழைத்துக்கொண்டு போய் விடுகிருன். இயற்கை நம்மையும், நமது திறமைகளேயும் ஒரே நொடி யில் பிரித்து விடுகிறது. நாம் மீண்டும் உலகில், பச்சிளம் குழந்தைகளாகப் பிறந்து வாழ்க்கை போராட்டத்தை ஆரம்பிக்கிருேம். இது தான் பல ஆயிரம் ஆண்டுகளாக நடந்து கொண்டிருக் கிறது. இந்த அற்புதம் எவருடைய முயற்சியும் இல்லாமல் தானுகவே இயங்கிக்கொண்டிருக்கிறது.

இவ்வாறு இயற்கையின் கைப்பாவையாக இயங்காமல், நமது அடுத்தப் பிறவியை திட்ட மிட்டு, பயனுள்ளதாக முடிவு செய்யும் வழி வகை களே, கீதையில் பகவான் விளக்கி கூறுகிருர்.

ஆதலால், நமக்கு கிடைத்திருக்கும் அரிய வாய்ப்பாகிய இந்தமனிதப் பிறவியை பயனுள்ள தாக ஆக்க, 'இந்த உலக வாழ்க்கை சாரமற்றது' என்பதை உணர்ந்து உடலின் மீதும், மற்ற பொருள்கள் மீதும் அதிக பற்று வைக்காமல், வாழ்ந்து அந்த உடலை இயக்கிக் கொண்டிருக்கும் ஆன்மாவை உணர முயற்சி செய்வதுதான் பயனுள்ள வாழ்க்கை என்று இந்த இருபத்தி மூன்றுவது ஸ்லோகம் விளக்கிக் கூறுகிறது.



சிந்தனையின் தொண்ணூறு சதவிகித ஆற்றல் சாதாரண மனிதனால் வீணாக்கப்படுகிறது. எனவே தொடர்ந்து அவன் பெரிய தவறுகளை செய்து கொண்டே இருக்கிறான். சரியான பயிற்சியைப் பெற்ற மனிதனின் மனம் ஒரு போதும் தவறு செய்வதில்லை.

— ஸ்வாமி விவேகானந்தர்

## ஸ்லோகம்–24.

## ஆன்ம நேய ஒருமைப்பாடு.

ஸ்ரீ மேதாதிதி கூறியது :—

த்வயி மயி ஸர்வத்ரைகோ விஷ்ணுர்
வ்யர்த்தம் குப்யஸி மய்யஸ விஷ்ணு:
ஸர்வஸ்மின்னபி பச்யாத்மானம்
ஸர்வத்ரோத்ஸ்ருஜ பேதஜ்ஞானம்

**ருத்துரை :—**

உன்னிடத்தும் என்னிடத்தும், பிறரிடத்தும் விஷ்ணுவே இருக்கிருர். என்னிடம் சகிப்பின்றி வீணுகக் கோபிக்கிருய். எல்லோரிடத்தும் ஆத்மாவையே காண்பாயாக. வேற்றுமை எண்ணத்தை எங்கும் விட்டு விடுவாயாக.

**விளக்கவுரை :—**

''மாலைகளில் கோக்கப்பட்டிருக்கும் மணிகளைத் தாங்கிக் கொண்டு மறைந்து நிற்கும் நூலைப் போல, நான் உலகில் உள்ள எல்லா ஜீவ ராசிகளுக்குள்ளும் மறைந்து நின்று, அவைகளை இயக்கிக் கொண்டிருக்கிறேன்'' என்று பகவத் கீதையில், 7வது அத்தியாயம், 7வது ஸ்லோகத்தில் பகவான் கூறுகிருர்.

அத்துடன் ''இறைவன் பிரிவு படாதவன், எனினும் பிரிவு பட்டவன் போல் எல்லா உயிர்களிடத்திலும் இருந்து அவைகள் உயிர்வாழ்வதற்கு ஆதாரமாக அவற்றை உண்டாக்கவும், அழிக்கவும் செய்கிருன்'' என்று 13வது அத்தியாயம் 17வது ஸ்லோகம் கூறுகிறது.

அதே மாதிரி 'அந்தப் பரம்பொருள் எல்லா உயிர்களிடத்திலும் பாகுபாடின்றி ஒரே மாதிரியாக இருப்பதையும், அழியும் பொருள்கள் எல்லா வற்றிலும் அழியாத ஒரு சக்தியாக இருந்து செயல் பட்டுக்கொண்டிருக்கிறது என்பதை உணர்பவர் களே உண்மையை உணர்ந்தவர்கள்' என்று 28வது ஸ்லோகத்தில் பகவான் கூறுகிறுர்.

இந்த உண்மையை உணர்ந்தவர்கள் தங்களைப் போலவே மற்ற எல்லோரிடத்திலும் ஆன்மா அல்லது இறைவனையே கண்டு எவரிடத்திலும் எந்த விதமான வேற்றுமை எண்ணம் இல்லாதவர்களாக அன்புடன் பழகுவார்கள் என்பதை விளக்க பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் கூறியுள்ள ஒரு கதையை ஞாபகப் படுத்த விரும்புகிறேன்.

ஒரு நாள் இரவு வழிப்போக்கன் ஒருவன் களைப் பின் மிகுதியால் சாலை ஓரமாக இருந்த ஒரு மண்ட பத்தில் உறங்கிக் கொண்டிருந்தான். அது சமயம் அங்கு வந்த திருடன் ஒருவன் அவனைப் பார்த்து, அவனையும் ஒரு திருடன் என்றும், அவன் எங்கோ திருடிவிட்டு வந்து அங்கு ஒளிந்து கொண்டிருப்ப தாகவும் எண்ணிஞன். அதஞல் அவனைத் தேடிக் கொண்டு வரும் காவலாளிகள் தன்னையும் பிடித்துக் கொள்ளுவார்கள் என்று பயந்து அங்கிருந்து ஓடிப் போஞன்.

சற்று நேரத்திற்குப் பிறகு அங்கு ஒரு குடிகா ரன் வந்தான். அவன் அந்த உறங்கும் மனிதனைப் பார்த்து, அவனும் தன்னைப் போலவே ஒரு குடிகா ரன் என்றும் அவன் அளவுக்கு மீறி குடித்துவிட்டு அங்கு விழுந்து கிடப்பதாகவும் நினைத்தான்.

கடைசியாக அங்கு ஒரு சந்நியாசி வந்தார். அவர் அந்த மனிதனை ஒரு துறவி என்றும்,

ஆழ்ந்த சமாதியில் இருப்பதாகவும் எண்ணி வ னுக்கு உபசாரம் செய்ய ஆரம்பித்தார்.

இதே மாதிரிதான் மக்கள் ஒவ்வொருவரும் தங்களுடைய மனப்பக்குவத்திற்கு ஏற்றவாறு மற்றவர்களையும் கணித்து பழகுகிறார்கள். நல்லவர்களுக்கு உலகம் முழுவதும் நல்லதாகவே தோன்றுகிறது. அதே உலகம் தீயவர்களுக்கு துன்ப மானதாகத் தெரிகிறது. இந்த உண்மையை உணர்ந்து உலகம் முழுவதும் இறைவனுடைய மாறு பட்ட தோற்றமே என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும் என்பதை இந்த 24வது ஸ்லோகம் விளக்குகிறது.

---



## ஸ்லோகம்-25.

## நண்பர்களும், பகைவர்களும்.

---

சத்ரௌ மித்ரே புத்ரே பந்தௌ
மா குரு யத்னம் விக்ரஹஸந்தௌ
பவ ஸ்மசித்தஸ் ஸர்வத்ர த்வம்
வாஞ்சஸ்-யசிராத்-யதி விஷ்ணுத்வம்.

**கருத்துரை :—**

பகைவனிடத்தும், நண்பனிடத்தும், புத்திரனிடத்தும், உறவினரிடத்தும் சண்டைக்கோ, சமாதானத்துக்கோ முயற்சி செய்யாதே நீ விஷ்ணுவின் பதவியை விரும்பினால் விரைவில் எங்கும் சமசித்தமுடையவனாக ஆக வேண்டும்.

**விளக்கவுரை :—**

நமக்கு நன்மைகளையும், உதவிகளையும் செய்து சந்தோஷத்தை உண்டாக்கும் நபர்களை நமது நண்பர்களாகவும், நமக்கு கேடு விளைவித்து கஷ்டப் படுத்துபவர்களை பகைவர்களாகவும் கருதுகிறோம்.

இயற்கையாகவே நண்பர்கள் என்றும், பகைவர்கள் என்றும் எவருமே கிடையாது. சந்தர்ப்பமும், சூழ்நிலைகளும்தான், நண்பர்களையும், பகைவர்களையும், உண்டாக்குகிறது.

சாதாரணமாக நமது பள்ளித் தோழர்களையும், அலுவலகங்களில் நம்முடன் தொழில் செய்யும் சகாக்களையும், வியாபாரத்தில் வாடிக்கையாக நம்முடன் தொடர்பு உள்ளவர்களையும், அரசியல்

பங்காளிகளேயும் இது தவிர பிரயாணங்களின் போதும், உல்லாச பொழுது போக்கு சங்கங் களிலும், அடிக்கடி சந்திப்பவர்களேயும், நமது சுற்றத்தாரையும் நாம் நண்பர்களாக பாவித்துப் பழகுகிருேம்.

நமக்கு பெருவாரியான நண்பர்கள் இருந் தாலும் அவர்களில் எவ்வளவு பேர் உண்மையான நண்பர்கள் அல்லது சுற்றத்தார்கள் என்பதை தக்க சந்தர்ப்பத்தில், அதாவது நமக்கு சோதனேகள் ஏற்படும்போதுதான் கண்டுகொள்ள முடிகிறது.

''கேட்டிலும் உண்டு ஓர் உறுதி — கிளேஞரை
நீட்டி அளப்பதோர் கோல்.''

என்று திருவள்ளுவர் கூறியுள்ளபடி நமக்கு கஷ்டங்கள் ஏற்படும்போதுதான் உண்மையான நண்பர்கள் யார்? சுயநலவாதிகளான வேஷதாரி கள் யார்? என்பதை கண்கூடாகக் கண்டுகொள்ள முடிகிறது.

உண்மையான நண்பர்கள் நமது கஷ்டங்களே தங்களுடைய கஷ்டங்களாக பாவித்து, அவர்களால் இயன்ற உதவியை தாங்களாகவே முன்வந்து எப்போதும் செய்வார்கள். அவர்கள் நமக்கு செய்யும் உதவிகளுக்கு நம்மிடமிருந்து எந்தவித மான பிரதிபலனேயும் சிறிதும் எதிர்பார்க்க மாட்டார்கள் அவசியமான சமயங்களில் தங்க ளுடைய உயிரைக்கூடத் கொடுக்கத் தயங்கமாட் டார்கள். அத்துடன் நாம் நமது அறியாமையினுல் செய்யும் தவருன காரியங்களேயும் தடுத்து, நமக்கு நல்வழி காட்டி உதவுவார்கள். ஒரு சில சந்தர்ப் பங்களில் நம்மை அறியாமல் அவர்களுக்கு கஷ்டங் களே உண்டாக்கினுலும் அதைப் பொருட்படுத்த மாட்டார்கள்.

ஆனால் நண்பர்களைப்போல் நடிப்பவர்கள் எப்போதும் நம்மிடமிருந்து எதையாவது எதிர்பார்த்துக்கொண்டே இருப்பார்கள். நாம் வசதியாகவும் சௌகரியமாகவும் இருக்கும்வரை நம்முடன் உறவு கொண்டாடுவார்கள். வெளியே நம்மைப் புகழ்ந்தாலும் உள்ளுக்குள் பொறாமையும், பகை உணர்ச்சியும் கொண்டு பழகுவார்கள். நமக்கு சோதனைகள் ஏற்படும்போது அவர்கள் நம்மிடமிருந்து விலகிக்கொள்வதோடு மாத்திரம் நில்லாமல் அவர்களால் இயன்ற அளவு கஷ்டங்களையும் உண்டாக்கத் தயங்கமாட்டார்கள். அவர்களே நமது ''பகைவர்கள்''. இவர்களை ''புறப்பகைவர்கள்'' எனக்கூறலாம்.

இம்மாதிரி 'புறப்பகைவர்களை' விட நமது 'அகப்பகைவர்கள்' மிகவும் ஆபத்தானவர்கள். ஏனெனில், நமக்குள்ளேயே நமது நண்பர்களைப் போலவே இருந்துகொண்டு, நம்மை அறியாமலே நம்மை மீளா நரகத்திற்கு கொண்டு செல்லுவது இந்த அகப் பகைவர்கள்தான்.

'தன்னைத்தான் வென்றவன் தனக்குத்தான் நண்பன்
தன்னைத்தான் ஆளாதவன் தனக்குத்தான் பகைவன்'

என்று கீதை கூறுகிறது.

ஆசை, கோபம், பொறாமை, குரோதம், அகந்தை, கஞ்சத்தனம் என்னும் ஆறு துர்குணங்களையே நமது உட்பகைவர்களாக கூறப்படுகிறது. இந்த உட்பகைவர்களிடம் சிக்காதவர்கள் மிகவும் அரிது. இந்த துர்குணங்களால் நமக்கு கஷ்டங்களும், அழிவும்தான் ஏற்படும் என்பது எல்லோருக்கும் தெரிந்திருந்தாலும், நாம் ஏமாந்து விடுகிறோம். ஆதலால், இந் உட்பகைவர்களிடம் நாம்

மிகவும் கவனத்துடனும் எச்சரிக்கையுடனும் இருப்பது அவசியம். இந்த உட்பகைவர்களை அடியோடு ஒழித்துக் கட்டுவது என்பது எவருக்கும் இயலாத காரியமாகும். ஆதலால், ஆசையை தியாகமாகவும், கோபத்தை சாந்தமாகவும், பொறுமையை பெருந்தன்மையாகவும், விரோதத்தை அன்பாகவும், கர்வத்தை கடவுள் பக்தியாகவும், கஞ்சத்தனத்தை பரோபகாரமாகவும் மாற்றினுல் மேலே கூறப்பட்ட பகைவர்களை ஓரளவு வெற்றிகொள்ளலாம்.

நமது அடுத்த பகைவர்கள் நமது புலன்கள். அதாவது, கண், காது, மூக்கு, வாய், மெய் என்னும் ஐம்பொறிகளை 'பஞ்சேந்திரியங்கள்' அல்லது ''ஞானேந்திரியங்கள்'' என்று கூறுகிறேம். இந்த பஞ்சேந்திரியங்களால்தான் நாம் வெளிஉலகுடன் தொடர்பு கொள்ளவும், 'அங்கு என்ன நடக்கிறது' என்பதை அறிந்து கொள்ளவும் முடிகிறது. நமக்கு வெளி உலகுடன் தொடர்பு இல்லாதவரை எந்தவிதமான பிரச்சனைகளும் ஏற்படுவதில்லை. ஆனுல் வெளி உலகத்துடன் தொடர்பு உண்டாகும் போது, நாம் மிகவும் கவனத்துடனும் எச்சரிக்கையாகவும் இருக்க வேண்டும். ஏனெனில் வெளி உலகுடன் தொடர்பை உண்டாக்கும் ஐம்புலன்களுக்கு இயற்கையாகவே அநேக பலவீனங்கள் உண்டு. இதை நன்கு உணர்ந்து நமது புலன்களை முறைப்படி பழக்கி, அடக்கி ஒழுங்காக உபயோகிக்கக்கற்றுக் கொண்டால், வெளி உலக தொடர்பினுல் ஏற்படும் சிக்கல்களில் சிக்காமல் தப்பித்துக் கொள்ளலாம்.

எல்லாவற்றிற்கும் மேலாக நான், எனது என்னும் அகந்தையையும், ஒழித்துக்கட்ட வேண்டும். அதுவும் ஒரு எதிரியே. புகழ்ச்சி என்னும் அற்ப சந்தோஷத்திற்கு அடிமையாகும் மனிதன்

எந்தக் காரியத்தையும் தன்னுடைய ஆத்ம திருப்திக் கர்கவோ அல்லது மற்றவர்களுடைய நன்மையை கருதியோ செய்வதில்லை. 'பிறரால் புகழப்பட வேண்டும்' என்பதற்காகவே செய்கிறான். இந்த உலகில் பிறரை ஏமாற்றியே வாழ்கிறான். இறுதியில் அவனும் ஏமாந்து போகிறான். அதனால் அவனுக்கு சிறிதும் அமைதி கிட்டுவதில்லை. அந்த வாழ்க்கை 'போலி வாழ்க்கை' அதை விட வேறு நரகம் கிடையாது.

இந்த உலகில் இறைவனும், அவனுடைய அடியார்களும்தான் நமக்கு உற்ற நண்பனும், உண்மையான உறவினர்களும் என்பதை நன்கு உணர்ந்து, அவர்களுடைய தொடர்புகளினாலும், சத்சங்கத்தினாலும் நமது வாழ்க்கையை வளப்படுத்தி, நன்மை, தீமை, என்னும் இருமைகளில் சிக்காமல், பிறவிப்பயனை அடைய வேண்டும் என்பதை இந்த இருபத்தி ஐந்தாவது ஸ்லோகம் விளக்குகிறது.

---



## ஸ்லோகம்–26

## விழிப்புணர்வு

---

*ஸ்ரீ பாரதீ வம்ஸர் கூறியது :*

காமம் க்ரோதம் லோபம் மோஹம்
த்யக்த்வாத்மானம் பாவய கோஹம்
ஆத்மஜ்ஞான-விஹீநா மூடாஸ்-
தே பச்யந்தே நரக-நிகூடா:

**ருத்துரை :—**

காமம், கோபம், லோபம், மதிமயக்கம் ஆகியவற்றை விட்டு நீங்கி, நான் யார்? என்று ஆத்ம சிந்தனை செய்வாயாக. ஆத்ம ஞானமில்லாதவர்கள் மூடர்கள். அவர்கள் நரகத்தீயில் ஆழ்ந்து வேக வைக்கப்படுகின்றனர்.

**விளக்கவுரை :—**

'பசித்திரு, தனித்திரு, விழித்திரு' என்பது வள்ளலார் வாக்கு. அவ்வாறு இருந்தால், நமக்கு ப-த-வி (பதவி) என்னும் மோட்சம் கிடைக்கும் என்று கூறுகிறார்.

'விழித்திரு' என்றால் கண்களைத் திறந்து கொண்டு இருப்பது என்று அர்த்தமல்ல. ஆன்ம உணர்வு கொள்ளுவதே விழிப்புணர்வு ஆகும்.

'அறியாமை' நிறைந்த இந்த உலகில் 'சிறிது விழிப்புடன் இரு' என்றும், 'உலகத்தின் தொடக்கத்தில் இருந்து நான் என்னையே தேடி அலைகிறேன்.

ஆனால் எனக்கு என்னை சந்திக்கும் பாக்கியமே கிடைக்கவில்லை' என்று மகாவீரர் கூறுகிறார்.

'அறியாமை' என்னும் உறக்க நிலையிலேயே வாழ்ந்துகொண்டிருக்கும் மனிதன் தன்னையும், தன்னுடைய இயற்கையான சுபாவத்தையும் புரிந்து கொண்டு, அவனுள் இருக்கும் ஜீவாத்மாவும், எங்கும் நிறைந்துள்ள பரமாத்மாவும் ஒன்றுதான், வேறல்ல, என்பதை உணரும்வரை அவன் பிறப்பு–இறப்பு என்னும் வட்டத்துக்குள்ளேயே சுற்றிக் கொண்டிருக்கிறான். அதிலிருந்து விடுபட்டு ஆன்ம விழிப்பை உண்டாக்கி, உறக்க நிலையில் இருக்கும் அவனுடைய மனசாட்சியை எழுப்பி நமது மனிதப் பிறவியின் மாண்பை உணர்த்துவதுதான் ''விழிப்புணர்ச்சி'' எனப்படும்.

அத்துடன் சுக துக்கங்களுக்குக் காரணமாக இருக்கும் மனத்தை ஒழித்து மனதற்ற நிலையில் வாழ்வதையும் 'விழிப்புணர்வு' என்று கூறலாம். நாம் உறக்க நிலையில் வாழ்ந்துகொண்டிருப்பதால் தான் எல்லா மகான்களும், ஞானிகளும், அறிஞர் களும், ஆசான்களும், நம்மை மீண்டும், மீண்டும் விழித்திருக்கும்படி கூறுகிறார்கள்.

நாம் ஒரு சமயம் பணத்தின் பிடியிலும், மற்றொரு சமயம் பதவியின் மோகத்திலும், சிக்கிக் கொண்டு தவிக்கிறோம். அத்துடன் புகழ், கீர்த்தி, அழகிய மனைவி, அன்பான மக்கள் முதலிய பந்தங் களிலும், புலன்களால் அனுபவிக்கும் அற்பசுகங்களை நாடியும், போலியான வாழ்க்கை வாழ்ந்துகொண் டிருப்பதால் வாழ்க்கையின் உண்மை நிலையையும், உண்மைப் பொருளாகிய பரமாத்மாவையும் உணர முடிவதில்லை. இது நமக்கு இயற்கை செய்யும் ஒரு வித சூழ்ச்சி அல்லது சோதனை ஆகும். நாம் அந்த

நிலையிலிருந்து விடுபட்டு உண்மையான ஆனந்தத்தை நாடி அடைய நமக்கு விழிப்புணர்வு உதவுகிறது.

உலகில் நாம் இன்பமாக வாழ இறைவன் அநேக வசதிகளை செய்து கொடுத்திருக்கிறான். ஆனால் நாம் அவைகளை சரியாகப் புரிந்துகொண்டு செயலாற்றாமல் நமது அறியாமையினால் அவற்றை தவறாக பயன்படுத்தி கஷ்டங்களை அனுபவிக்கிறோம்.

வாழ்க்கையை அலட்சியமாக எண்ணாமல் 'வாழ்க்கைக்கு ஒரு நோக்கம் உண்டு' என்பதை உணர்ந்து செயல்பட வேண்டும். வாழ்க்கையில் நாம் கடைப்பிடிக்க வேண்டிய சிறு சிறு செயல்களையும் அலட்சியம் செய்யாமல் மதித்து, இயற்கை நியதிகளை அனுசரித்து நடந்து வீணான பழக்க வழக்கங்களுக்கு அடிமை ஆகாமல் பயனுள்ள செயல்களையே செய்ய வேண்டும்.

எந்தக் காரியங்களை செய்யக் கூடாதோ அவைகளை துவக்கத்திலிருந்தே விழிப்புடன் இருந்து தவிர்க்கவேண்டும்.

'கோபம் அன்பை அழித்துவிடுகிறது.
பொறாமை நட்பைக் கொன்றுவிடுகிறது.
பேராசை வாழ்க்கையையே நாசமாக்கி
விடுகிறது.'

ஆதலால், இந்த மூன்று குணங்களையும் ஆரம்பத்திலிருந்தே தலையெடுக்கவொட்டாமல் அழித்து விடவேண்டும். ஏனெனில் இந்த மூன்று குணங்கள் தான் நமது எதிரிகள்.

இதே கருத்தை பகவத் கீதையில், மூன்றாவது அத்தியாயம், முப்பத்தி ஏழாவது ஸ்லோகத்தில்

'மனிதனை பாவம் செய்யத் தூண்டுவதாகிய ஆசையும், கோபமும் அழிவை உண்டாக்குகிறது. ஆதலால், இவைகளே மனிதனின் எதிரிகள்'' என்றும், பதினாறாவது அத்தியாயம், இருபத்தி ஒன்றாவது ஸ்லோகத்தில் :—

'நரகத்திற்கு பேராசை, கோபம், அகந்தை என்று மூன்று வாயில்கள் உள்ளன. மக்களுடைய இந்த மூன்று குணங்களே ஆன்மாவை நரகத்திற்கு இழுத்துச் செல்லுகிறது' என்றும்,

இருபத்தி இரண்டாவது ஸ்லோகத்தில்,

''இந்த மூன்று குணங்களையும் விட்டு ஒழித்தவர்களே முக்தியை அடைவார்கள்'' என்றும் பகவான் கூறுகிறார்.

ஆதலால் மனதில் ஆசை, பொறாமை, கோபம், ஆணவம், சந்தேகம் முதலிய துர்குணங்கள் தோன்றும்போது விழிப்புணர்வுடன் இருந்து, அந்த தீய குணங்களை வளரவிடாமல், முளையிலேயே கிள்ளி எறிந்துவிட வேண்டும்.

அத்துடன் நமது வாழ்க்கையின் இறுதி லட்சியமாகிய முக்தியை அடைவதையே குறிக்கோளாகக் கொண்டு செயல்பட வேண்டும் என்பதையே இந்த இருபத்தி ஆறாவது ஸ்லோகம் விளக்கிக் கூறுகிறது.



## ஸ்லோகம்-27.

## தெய்வீக வாழ்க்கை

*ஸ்ரீ ஸுமதி கூறியது:*

கேயம் கீதா-நாமஸஹஸ்ரம்
த்யேயம் ஸ்ரீபதிரூப-மஜஸ்ரம்
நேயம் ஸஜ்ஜனஸங்கே சித்தம்
தேயம் தீனஜனாய ச வித்தம்

**ரை :—**

கீதையும், சகஸ்ரநாமமும், பாராயணம் செய்ய வேண்டும். மனதை நல்லவர்களின் இணக்கத்தில் சேர்ப்பிக்கவேண்டும். பொருளை ஏழை ஜனங்களுக்கு தானம் செய்ய வேண்டும்.

**விளக்கவுரை :—**

உலகில் பிறந்துள்ள மக்கள் அனைவரும் எப்போதும் அமைதியாகவும், ஆனந்தமாகவுமே வாழ விரும்புகிறார்கள். அதன் பொருட்டே அநேக விதமான காரியங்களையும் செய்துகொண்டிருக்கிறார்கள். ஆனால், அவர்களுடைய இந்த விருப்பம் நிறைவேறாமல் இறுதியில் ஏமாற்றமே அடைகிறார்கள்.

உலகில் பெருவாரியான மக்கள் அவர்களுடைய உடலின் மீது பற்றுவைத்து வாழ்கிறார்கள். அவர்களின் புலன்கள் வாயிலாக இன்பம் காண நினைக்கிறார்கள். அத்துடன், அழியும் தன்மையான

உலகப் பொருள்களிலிருந்தும், உற்ருர் உறவினர்களிடமிருந்தும், பணம், பதவி, பட்டம் போன்ற போலியான சம்பத்துக்களிலிருந்தும் ஆனந்தத்தையும் அமைதியையும் அடைய விரும்புகிருர்கள். அதுவே அவர்களுடைய ஏமாற்றத்திற்கும், கஷ்டத்திற்கும் காரணமாக இருக்கிறது.

நமது உடலேயும், ஐம்புலன்களேயும்விட நமது மூளேயும், அதன் வாயிலாக அடையும் அறிவாற்றலும் சிறந்தது. இதே கருத்தை

''அறிவுடையார் எல்லாம் உடையார் —
அறிவிலார்
என்னுடையரேனும் இலர்.''

என்று குறளாசிரியர் கூறுகிருர்.

அதன்படி அறிவின் துணேகொண்டு நமது குறிக்கோளே அடைய முயற்சி செய்யவேண்டும். அதற்கு உறுதுணேயாகவும், வழிகாட்டியாகவும், பகவத்கீதையும், விஷ்ணு சகஸ்ரநாமமும் உதவுகிறது. அத்துடன் நல்லோருடைய கூட்டுறவினுலும் நமது அறிவை வளர்த்து உண்மைப் பொருளே உணர முடியும்.

உண்மைப் பொருளே உணர்ந்துகொள்ளும் போது நமது சுயநல உணர்விலிருந்து விடுபட்டு நமது உள்ளத்தில் அன்பு பெருக்கெடுத்து ஓட ஆரம்பிக்கிறது. அன்பு உள்ளம் கொண்டவர்கள், எல்லோரிடத்திலும் இறைவனேக் கண்டு அன்புடன் பழகுகிருர்கள். அதனுல் அவர்களுடைய உடல், பொருள், ஆவி அனேத்தையும் பிறருக்கு உதவ சித்தமாக இருக்கிருர்கள். அவர்கள் தங்களுக்காக உலகில் வாழ்வதில்லே. அம்மாதிரி அன்பு உள்ளத்துடன் வாழ்கிறவர்கள்தான் உலகில் அமைதியாகவும்,

ஆனந்தமாகவும் வாழமுடியும். இதுவே தெய்வீக வாழ்க்கை'' எனப்படும்.

அதன்படி நாமும், கீதையையும், விஷ்ணு சகஸ்ரநாமத்தையும் பாராயணம் செய்தும், நல்லோருடைய கூட்டுறவை நாடியும், நம்மிடம் உள்ள பொருள்களையும், மற்ற வசதிகளையும் ஏழை எளிய மக்களுக்கு உதவியும் அவர்களுடைய கஷ்டங்களைப் போக்கி, மற்றவர்களும் நம்மைப்போலவே வாழ்க்கையில் சந்தோஷமாக வாழ்வதைக் காண்பதில் மகிழ்ச்சி அடைவதையே குறிக்கோளாகக்கொண்டு, தெய்வீக வாழ்க்கை வாழ்ந்து, அமைதி பெற வேண்டும் என்பதை இந்த இருபத்தி ஏழாவது ஸ்லோகம் விளக்குகிறது. இதுவே ''ஞானப் புதையல்'' என்னும் பஜ கோவிந்தத்தின் குறிக்கோள் ஆகும்.

---

**சாதகர்களுக்கு**

உன் உணர்ச்சிகளுக்கு அடிமை ஆகிவிடாதே. அவற்றை அடக்கி ஆள். அவை உன்னை ஆள விடாதே. தன் உணர்ச்சிகளை அடக்கியவனுக்கே மனசாந்தி உண்டாகும். அவனே உண்மையில் பலவான்.

ஸ்வாமி சிவானந்தா.

## ஸ்லோகம்—28.

## மரணம்தான் முடிவு

ஸுகத: க்ரியதே ராமா-போக:
பச்சாத் ஹந்த சரீரே ரோக:
யத்யபி லோகே மரணம் சரணம் ததபி
ந முஞ்சதி பாபாசரணம்

**ருத்துரை :—**

சுகமாக மாதர் போகத்தை ஒருவன் அனுபவிக்கிருன். ஐயோ பாவம்! முடிவில் உடலில் ரோகத்தை அனுபவிக்கிருன். உலகில் மரணம் தான் முடிவில் எல்லோரும் அடைவது என்று தெரிந்திருந்தும் பாவம் செய்வதை விடுவதில்லை.

**விளக்கவுரை :—**

நாம் பிறக்கும் போது நம்முடன் எதுவும் கொண்டு வருவதில்லை. அதே மாதிரி நாம் இந்த உலகைவிட்டு போகும் போது எதையும் நம்முடன் கொண்டு செல்லவும் முடியாது. இந்த உண்மை எல்லோருக்கும் தெரிந்திருந்தாலும் மக்கள் அவர்களுடைய வாழ்நாள் முழுவதையும் பொருள் ஈட்டுவதிலேயே நாட்டம் உள்ளவர்களாக வாழ்கிருர்கள். அத்துடன், 'இந்த உலகில் பிறந்துள்ள அனைவரும்' ஒரு நாள் இறக்கத்தான் வேண்டும்' என்னும் உண்மையும், எல்லோருக்கும் தெரிந்திருந்தாலும், எவரும் இந்த உலக வாழ்க்கையிலிருந்து விடுதலை அடைய விரும்புவதில்லை.

அதே சமயம் அவர்கள் 'உலகில் எவ்வளவு ஆண்டுகாலம் இருக்க ஆசைப்படுகிறார்கள்' என்பதையும் தெளிவாக சிந்திப்பதில்லை.

மக்கள் அதிகமாக வாழ்ந்தால், நூறு ஆண்டுகள் வாழலாம் வேண்டுமானால் இன்னும் நூறு ஆண்டுகள் இருக்க ஆசைப்படலாம். ஆனால் வயது ஏற, ஏற; முதுமை வளர, வளர வாழ்க்கை பரிதாபத்திற்குரியதாக இருக்குமே அன்றி அதனால் வேறு எந்த விதமான பலனோ, சுகமோ ஏற்படாது என்பதை எண்ணிப்பார்ப்பதில்லை.

நமது உடல் தளர்ச்சி அடையும்போதும் பலருடைய உதவியை நாட வேண்டிய பரிதாபநிலை ஏற்படும் போதும், நமது இளமை கால நினைவுகள் அடிக்கடிவந்து நம்மை தாக்கும்போதும் நாம் அனுபவிக்கும் வேதனை சகிக்க முடியாததாக இருக்கும்.

நம்மை இம்மாதிரி நரக வேதனையிலிருந்து விடுவித்து, நம்மை அறியாமலேயே இறைவன் அல்லது இயற்கை நமக்கு செய்யும் மறைமுகமாக மாபெரும் உபகாரம்தான் நமது 'மரணம்'. ஆதலால் யாரும் மரணத்தைக் கண்டு பயப்படவோ அல்லது மரணத்தை வெறுத்து ஒதுக்கவோ வேண்டியதில்லை. மரணத்தை நமது எதிரியாக நினைக்கக் கூடாது. தொல்லைகள் நிறைந்த இந்த உலக வாழ்க்கையிலிருந்து நமக்கு விடுதலை கொடுக்கும் மரணம்தான் நமக்கு உற்ற நண்பன்.

இந்த உண்மையை உணர்ந்து ஒவ்வொருவரும், எந்த நிமிஷமும், மரணத்தை வரவேற்க சித்தமாக இருக்க நம்மை நாமே பழக்கப்படுத்திக் கொண்டால் மரண பயத்திலிருந்து தப்பலாம். மரணத்

தைக் கண்டு பயப்படாதவர்கள் வாழ்க்கையில் ஒரு முறைதான் மரணத்தை சந்திக்கிறார்கள். ஆனால் மரண பயம் உள்ளவர்கள் ஒவ்வொரு நிமிஷமும் மரண அவஸ்தையை அனுபவித்து கஷ்டப்படு வார்கள்.

ஒரு வித்து மடியும் போதுதான் அதிலிருந்து விருட்சம் வெளிப்படுகிறது. அதேமாதிரி பூ மடியும் போது பிஞ்சும், பிஞ்சு மடிந்து காயாகவும், காய் மடிந்து கனியாகவும், கனி மடிந்து மீண்டும் வித்தாகவும் மாறுகிறது. ஒன்று மடியும் போது தான் அதைவிடச் சிறந்த மற்றொன்று தோன்ற ஏதுவாகிறது. அதேமாதிரி நமக்கும் நமது மரணத் திற்குப் பிறகு இதைவிடச் சிறந்த பிறவிக்கு வழி ஏற்படுகிறது.

ஆதலால் நாம் வாழ்ந்து கொண்டு இருக்கும் போதே மரணபயத்தை விட்டு நாம் வாழ்க்கையில் அடையவேண்டிய முக்திக்கு வழிவகைகளை சிந்தித்து, அதன்படி வாழ்ந்து வாழ்க்கையை பயனுள்ளதாக ஆக்குவதே அறிவுடைமை ஆகும் என்று இந்த இருபத்தி எட்டாவது ஸ்லோகம் விளக்குகிறது.

---

மரணம் எப்போது வேண்டுமானாலும் மனிதனை வந்து தாக்கும். அதற்கு முற்றிலும் ஆயத்தமாக இருப்பவனுக்கு மரண பயமோ, துன்பமோ ஏற்படுவதில்லை, என்று பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்சரியில் கூறுகிறார்கள்.

## ஸ்லோகம்-29.

## பயனில்லாத பணம்

''அர்த்த-மநர்த்தம் பாவய நித்யம்
ஸநாஸ்தி தீத: ஸுகலேஸ: த்யம்:
புத்ராதபி தநபாஜாம் பீதி:
ஸர்வத்ரைஷா விஹிதா ரீதி:''

**ருத்துரை :—**

*பணத்தை சுகமென்று எண்ணுதே, அது எப்பொழுதும் துன்பத்தை தருவதுதான் என்று எண்ணு. அதனுல் சிறிதும் சுகமில்லை. பிள்ளையிட மிருந்து பணம் வாங்கினுலும் பயம்தான். எல்லோரிடத்திலும் பணத்தால் ஏற்படக்கூடிய துன்பம் சமமானதுதான்.*

**விளக்கவுரை :—**

*இந்த உலகில் ''பணம் இல்லாதவனே பிணம்'' என்று கூறுவார்கள். அதே மாதிரி பணத்தை ''ஆட்க்கொல்லி'' என்றும் கூறுவது உண்டு. பணத்தை பல காரியங்களுக்கு பயன்படுத்தலாமே தவிர, பணத்திலேயே எந்தவிதமான சுகமோ, இன்பமோ கிடையாது. பணத்தை பணமாக வைத்திருப்பதனுல், எந்தவிதமான பிரயோசனமும் ஏற்படாது.*

*பணத்தை சம்பாதிப்பது கஷ்டமான காரியமே அல்ல. பரிசுச் சீட்டு வாங்குகிறவர்கள் கூட ஒரே நாளில் லட்சாதிபதிகளாகவும், கோடீஸ்வரர்களாகவும் மாறிவிடுகிறுர்கள். ஆனுல் சம் பாதித்த பணத்தை சீராகவும், முறையாகவும் செலவு செய்து பயன் அடைவதுதான் சிறந்த கலை.*

அதனுல்தான் அறிவாளிகள் பணத்தை கொடுப்பதற்குமுன் அறிவைக் கொடுக்கும்படி இறைவனிடம் வேண்டுகிருர்கள். பணத்தை நேர் வழியில் சம்பாதித்து, முறையாக செலவு செய்து, நமது தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளவும், நம்மை சார்ந்தவர்களுக்கும், இதர நல்ல காரியங்களுக்கும் பயன்படுத்துவதுதான் விவேகமான செயல்.

பெருவாரியான மக்கள் பணத்தை எதற்காக சேர்த்து வைக்கிருேம் என்பதே தெரியாமல், வாழ்க்கை முழுவதும் பணம் சேர்ப்பதையே குறிக்கோளாக கொண்டு வாழ்கின்றனர். அவர்கள் கஷ்டப்பட்டு உழைத்து சம்பாதிக்கும் பணத்தை தாங்களும் அனுபவிக்காமல், பிறருக்கும் உதவாமல், வாழ்நாள் முழுவதும் பணம் சேர்க்கும் பூதங்களாகவே மாறிவிடுகின்றனர். எந்த வகையிலாவது அவர்களுக்கு வேண்டியது பணம்தான் அதற்காக அவர்கள் தவருன செயல்களில் ஈடுபடவும் தயங்குவதில்லை. அவர்களுடைய இந்த ஆசை அவர்களை வாழ்நாள் முழுவதும் மீளா நரகத்தில் தள்ளிவிடுகிறது. அவர்களுக்கு சந்தோஷத்தையும், இன்பத்தையும் கொடுக்கும் என்று எண்ணி சேர்த்து வைத்த பணம் அதற்கு நேர் மாருன விளைவுகளையே ஏற்படுத்துகிறது. அவர்கள் கஷ்டப்பட்டு சேர்த்து வைக்கும் பணத்தை அவர்களும் அனுபவிக்காமல், மற்றவர்களுக்கும் பயன்படாமல் அவர்களுடைய வாரிசுகளால் தவருன வழிகளில் செலவு செய்து அழிக்கப்படுகிறது.

பணம் இல்லாதவர்களுக்கு, ''பணம் இல்லையே'' என்ற ஒரே பிரச்சனைதான் உண்டு. ஆனுல், அதிக பணத்தை வைத்திருப்பவர்களுக்கு அதனுல் அநேக பிரச்சனைகள் ஏற்படுகிறது. அவர்

களுக்கு அரசாங்க அதிகாரிகளால் துன்பமும், நண்பர்களிடமிருந்து பலவிதமான தொந்தரவுகளும் எப்போதும் இருந்து கொண்டே இருக்கும். அவர்களுக்கு சரியான உறக்கம்கூட இருப்பதில்லை. அம்மாதிரி மக்கள் அவர்களுடைய மனைவி, மக்களைகூட நம்புவதில்லை. அவர்களுக்கு எவரை பார்த்தாலும் சந்தேகமும், பயமும் தோன்றுகிறது. அதனால் அவர்களுடைய நண்பர்களையும் பந்துக்களையும் பகைவர்கள் ஆக்கிவிடுகிறது. பணத்தை சரியான முறையில் கையாளத் தெரியாதவர்களுக்கு அது விபரீதமான விளைவுகளையே உண்டாக்குகிறது. அவர்களுடைய இறுதி காலத்திலும்கூட அமைதியாக சாக முடிவதில்லை.

பணத்தின் பிடியில் சிக்கிக்கொண்டிருக்கும் பணக்காரர்களுக்கு, வாழ்க்கையில் ஒருவிதமான அலட்சிய மனப்பான்மையும், கர்வமும் உண்டாகிறது. அதனால் மற்றவர்களை உதாசீனம் செய்கிறார்கள். அதன் விளைவு அவர்களுக்கு துன்பத்தை உண்டாக்குகிறது.

இந்த கருத்தை பகவன் ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறியுள்ள ஒரு சிறுகதை நன்கு விளக்குகிறது :—

ஒரு யானைப்பாகன் அவனுடைய யானையை குளிப்பாட்ட தினசரி ஆற்றங்கரைக்கு கொண்டு செல்வது வழக்கம். அது சமயம், வழியில் எதிர்படும் சிறு சிறு பிராணிகள், யானை வருவதைக்கண்டு அஞ்சி, நடுங்கி ஓடி ஒளிந்துகொள்ளும். அம்மாதிரி ஒளிந்துகொள்ளும் பிராணிகளில் ஒரு தவளையும் இருந்தது.

அந்த தவளைக்கு, ஒருநாள் பாதை ஓரத்தில் ஒரு ரூபாய் கிடைத்தது. அந்த ரூபாயை வைத்துக் கொண்டு, கர்வம் அடைந்த தவளை யானை வருவதைக் கண்டு பயந்து ஓடாமல், வழியில்

உட்கார்ந்துகொண்டு, யானையைப் பார்த்து, 'யானையே! என்னிடம் ஒரு ரூபாய் இருக்கிறது. நான் இப்போது பணக்காரன்.' ஆதலால் ''நீ வழியைவிட்டு விலகிச் செல்'' என்று கத்தியது. ஆனால் யானை அதை சிறிதும் கவனியாமல் நடந்து செல்லும்போது, அந்த தவளை யானையின் கால்களில் சிக்கி, நசுங்கி மடிந்தது.

இதே மாதிரிதான் பெருவாரியான மக்கள் பணத்தினால் மமதை கொண்டு அழிவை தேடிக் கொள்கிறார்கள். நாம் எல்லோருமே பணத்தை, ''வேண்டும், வேண்டும்'' என்றுதான் பழகி இருக்கிறோம். பணத்தை ''வேண்டாம், வேண்டாம்'' என்று ஒதுக்குவதே சன்னியாசம். துறவு நிலையை அடையாதவர்களுக்கு முக்தி கிடைக்காது.

பணம் இல்லாததால், ஒருவனை ஏழை என்று கூறமுடியாது. மனம் நிறைவு இல்லாதவனே உண்மையான ஏழை,

''பொருள் இல்லார்க்கு இவ்வுலகில்லை, அருள் இல்லார்க்கு அவ்வுலகில்லை'' என்னும் முதுமொழிக் கிணங்க, நாம் பணத்தை முறையாக சம்பாதித்து நமது தேவைகளை பூர்த்தி செய்து, மகிழ்ந்து, நம்மிடம் உள்ள பணத்தை நல்ல காரியங்களுக்கும் செலவுசெய்து அவ்வுலகிலும் இன்புற்று வாழ நம்மை உரியவர்களாக ஆக்கிகொள்ள வேண்டும்.

'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்' என்று திருக்குறள் ஆசிரியர் கூறியுள்ளபடி வாழும் முறைகளைத் தெரிந்து, அதன்படி வாழ்ந்தால், இந்த மண்ணுலகத்தையே விண்ணுலகமாக ஆக்கி மகிழலாம் என்னும் கருத்தை, இந்த பஜ கோவிந்தம் 29வது ஸ்லோகம் கூறுகிறது.

## ஸ்லோகம்—30.

## ஆன்ம ஒளி

''ப்ராணுயாமம் ப்ரத்யாஹாரம்
நித்யாநித்ய-விவேக-விசாரம்|
ஜாப்யஸமேத-ஸமாதி-விதானம்
குர்வவதானம் மஹ-தவதானம்

**ருத் ரை :—**

பிராணுயாமம், வெளி நாட்டத்தினின்று இந்திரியங்களைத் திருப்புதல், எது அழிவது, எது அழியாதது என்று ஆராய்ந்தறிதல், ஜபத்துடன் ஸமாதி கூடுதல் ஆகியவற்றை மிகுந்த கவனத்துடன் செய்வாயாக.

**விளக்கவுரை :—**

நாம் நமது வாழ்க்கையின் இறுதி லட்சிய மாகிய 'முக்தியை' அடைந்து, ஆனந்தமாக வாழ நமக்கு ''ஆன்ம ஒளி'' உதவுகிறது.

அந்தகாரத்தில் வாழ்ந்துகொண்டிருக்கும் நமக்கு, முக்திக்கு வழிகாட்டும் அந்த ஒளியை, நமக்கு வெளியே காணமுடியாது. அந்த ஒளி நமக்குள்ளேயே இருக்கிறது.

'தெய்வீகமான எனது மாயை கடத்தற் கரியது' என்று பகவான் கீதையில் 7-வது அத்தியாயம், பதிணுன்காவது ஸ்லோகத்தில் கூறுகிருர். அதன்படி தீவிரமாக முயற்சி செய்தால்தான் நமக்குள் இருக்கும் ஆன்ம ஒளியை காணமுடியும்.

நமது உடல் பஞ்சபூதங்களின் சேர்க்கையாலும் மனம், புத்தி, அகங்காரம் என்னும் 'அந்தகரணங்கள்' என்று கூறப்படும் சித்தத்திலுைம் ஆக்கப் பட்டு ஆன்மாவினுல் இயக்கப்படுகிறது.

நமது கண், காது, மூக்கு, வாய், ஸ்பரிசம் என்னும் ஐந்து இந்திரியங்களினுல்தான் நாம் வெளி உலகுடன் தொடர்பு கொள்ள முடிகிறது. இந்திரியங்களின் வாயிலாக ஏற்படும் வெளி உலகின் தொடர்பினுல் நமது சித்தத்தில் பலவிதமான எண்ணங்களும், ஆசைகளும், கற்பனைகளும் தோன்றுகின்றன.

'உயர்ந்த மக்களுடைய சேர்க்கையினுலும் நல்ல நூல்களைப் படிப்பதனுலும், அமைதியான சூழ்நிலையிலும், உயர்ந்த எண்ணங்களும், கீழ்த்தரமான மக்களுடைய கூட்டுறவினுல் கீழான எண்ணங்களும் நமது மனதில் தோன்றுகிறது.

நமது எண்ணங்களுக்கு ஏற்றவாறு ஆன்மா செயல்படுகிறது. நமது மனதில் தோன்றும் 'எண்ணங்கள்' என்னும் விதைகள் மனம் என்னும் பூமியில் விழுந்து, முளைக்கும் தருணத்தை எதிர் பார்த்து காத்திருக்கிறது. 'சந்தர்ப்பம்' அல்லது 'வாய்ப்பு' என்னும் நீர் பாய்ச்சப்படும்போது, அந்த எண்ணங்கள் செடியாகவும், மரமாகவும் முளைத்து, நமது அனுபவங்களாக உருவெடுக்கிறது. நல்லெண்ணங்களுக்கு ஏற்றவாறு நல்ல அனுபவங்களும் தீய எண்ணங்களுக்கு கெட்ட அனுபவங்களும் உண்டாகிறது.

நமது எண்ணங்களை கட்டுப்படுத்தி, மனதை முறையாக பழக்கும் மார்க்கங்களை பதஞ்சலி முனிவர் 'யோக சூத்திரம்' என்னும் நூலில் மிக அழகாக விளக்கி கூறியிருக்கிறுர்.

நமது கண்களால் பார்க்கும் பொருள்களும், காதுகளால் கேட்கும் செய்திகளும், ஸ்பரிசத்தினுல் உணரப்படும் அனுபவங்களும் நமது சித்தத்தை சலனப்படுத்துகிறது. அத்துடன் நமது எண்ணங் களுக்கு ஏற்றவாறு சித்தம் மாற்றம் அடைகிறது. இதை யோக சாஸ்திரத்தில் 'சித்தத்தின் விருத்திகள்' என்று கூறப்படுகிறது.

நமக்கு வயிற்றுப்பசி ஏற்படும்போது நாம் உணவின் பிடியில் சிக்கிக்கொண்டு தவிக்கிறோம். அப்போது உணவின்மீது அபரிமிதமான ஆவல் உண்டாகிறது. ஆனுல் உணவை உண்டு, பசி அடங்கியபின் அதே உணவின்மீது வெறுப்பு ஏற்படுகிறது. அப்போது நாம் உணவின் பிடி யிலிருந்து விடுதலை அடைகிறோம்.

அதே மாதிரி மற்ற உலகப் பொருள்கள்மீது வைத்திருக்கும் பற்றுக்களை ஒழிக்கும்போது அவை களிலிருந்தும் விடுதலை பெறலாம். அத்துடன் நமது உடலின்மீதும், உற்றார் உறவினர்களிடமும் வைத்திருக்கும் பற்றுக்களிலிருந்தும் விடுதலை அடையவேண்டும். அதுதான் உண்மையான சுகம்.

ஒரு பொருளை தொடர்ந்து சிந்தித்துக் கொண்டே இருந்தால் நமது சித்தமும் அந்தப் பொருளாகவே மாறிவிடுகிறது. இதையே 'தியானம்' என்று கூறப்படுகிறது.

முறையான பழக்கத்தினுலும், பற்றின்மை யினுலும், உலகப் பொருள்களிடம் உள்ள ஆவலைத் துறக்கும்போது நமது சித்தம் தெளிவடைந்து வலிமை பெறுகிறது.

திடசித்தத்துடன் தொடர்ந்து தியானத்தில் இருக்க பழகிக்கொண்டால், சித்த விருத்திகள் அடங்கி, 'ஆன்ம அனுபவம்' உண்டாகிறது. இதன் முதிர்ந்த நிலேயே 'சமாதி' என்று கூறப்படுகிறது. 'சமாதி' நிலேயே யோகிகளின் இலட்சியம்.

அடுத்தபடியாக சித்தத்தையும் துறந்து, ஆன்மா, அதன் சுய வடிவத்திலேயே லயித்து நிற்கும்போது, யோகிகள், உடல் உணர்வுகூட இல்லாதவர்களாக, பஞ்ச பூதங்களேயும் கடந்த நிலேயில் இருந்து பரமானந்தத்தை அனுபவிக்கிருர்கள். இதுவே, 'முக்தி நிலே' எனப்படுவது. இந்த நிலேயை அடைவது மிகவும் துர்லபம்.

இந்த நிலேயை அடையும் உபாயத்தையும் பதஞ்சலி முனிவர் சுருக்கமாக கூறுகிருர் :—

முதலில் உலகப்பொருள் மீது நமக்கு இருக்கும் பற்றுக்களே அடியோடு அழித்துவிட வேண்டும்.

அடுத்தபடியாக, நமது மனதில் எழும் எண்ணங்களே வளர விடாமல் வெட்டிவிட வேண்டும். அதன் பிறகு மனதை ஒருமுகப்படுத்தி, தியானம் பயில வேண்டும்.

ஒருமுகப்படுத்தப்பட்ட மன நிலேயிலிருந்து, மனதற்ற நிலேக்கு செல்லும்போது, ஆன்மாவை உணரமுடியும். ஆன்ம உணர்விஞல்தான் நமக்குள் இருக்கும் பேரொளியை காணமுடியும். நமது ஆன்ம ஒளி நமக்கு பேரானந்தத்தையும், பரமசுகத்தையும் உண்டாக்குகிறது. இதுவே, நாம் வாழ்க்கையில் அடையவேண்டிய உன்னத நிலேயாகும் என்பதை இந்த முப்பதாவது ஸ்லோகம் விளக்குகிறது.

---

## ஸ்லோகம்—31.

## குருவும், சீடனும்.

---

குருசரணாம்புஜ-நிர்ப்பர-பக்த:
ஸம்ஸாரா-தசிராத் பவ முக்தः
ஸேந்த்ரிய-மானஸ-நியமாதேவம்
த்ரக்ஷ்யஸி நிஜ-ஹ்ருதயஸ்தம் தேவம்.

**பதவுரை :—**

குருவின் திருவடித் தாமரைகளில் திடமான பக்தி உடையவனாகிப் பிறவித் தளையினின்று விரைவில் விடுபடுவாயாக. இங்ஙனம் இந்திரியங்களுடன்கூட மனதையும் அடக்கி உன்னுடைய இருதயத்தில் உறையும் தெய்வத்தைக் காண்பாய்.

**விளக்கவுரை :—**

குருவை ஆசான், ஆசிரியர், போதகர், உபாத்தியாயர் என்று பலவிதமாகக் கூறுவார்கள்.

நாம் இவ்வுலகில் பிறக்கும்போது ஒன்றுமே தெரியாத ஜடமாகத்தான் பிறக்கிறோம். அதன் பிறகு நமது மாதா, பிதா, குரு முதலியவர்கள் வாயிலாகவும், இயற்கையின் இயக்கங்களிலிருந்தும், நாம் தினசரி பழகும் மக்களிடமிருந்தும்,

''தொட்டனைத்தூறும் மணற்கேணி-
மாந்தர்க்கு
கற்றனைத்தூறும் அறிவு''.

என்னும் திருவள்ளுவர் வாக்கின்படி வாழ்க்கைக்கு அவசியமான அநேக விஷயங்களைக் கற்றுத் தெரிந்து

கொள்ளுகிறோம். அவ்வாறு நமது அறிவை வளர்க்க நமக்கு உதவும், அவர்கள் எல்லோரும் நமது 'ஆசிரியர்களே'!

நமக்கு முதல் குருவாக அமைவது நமது அன்னையும், அதன் பிறகு நமது பிதாவுமே. அவர்களே நமக்கு இவ்வுலகில் நாம் தெரிந்துகொள்ள வேண்டிய அநேக அடிப்படை விஷயங்களைக் கற்றுக் கொடுக்கிறார்கள்.

அதன் பிறகு நமது வாழ்க்கையின் வெற்றிக்கு இன்றி அமையாத கல்வியை நமக்கு கற்றுக் கொடுத்து, நமது அறிவுக்கண்களை திறந்துவைப்பவரை நாம் ''ஆசிரியர்'' என்று கூறுகிறோம்.

நாம் கற்றுக்கொண்ட அறிவின் துணையுடன் நேர்மையான, முறையான, நெறியான வாழ்க்கை வாழவேண்டும். அதுசமயம் நமக்கு இயற்கை கற்றுத்தரும் பாடங்களையும் கவனமாக இருந்தால் நாம் அநேக உண்மைகளை தெரிந்துகொள்ளலாம்.

அவற்றில் உதாரணமாக:—

இறைவனுடைய படைப்பில் நமது கண்களுக்கு புலப்படும் பொருள்கள் எல்லாவற்றிலும் வல்லமை மிக்கதும், பூமியின் இயக்கத்திற்கு இன்றியமையாததுமான 'சூரியன்' தினசரி காலையில் பால்யமாகவும், அழகாகவும், சாந்தமாகவும் உதித்து (தோன்றி) படிப்படியாக வளர்ந்து உச்சி வேளையில் அதி உஷ்ணமாகவும், வீரியத்துடனும், இளமைத் துடிப்புடன் இருந்து மாலையில் சக்தி குறைந்து மீண்டும் சாந்தமடைந்து இறுதியில் மறைந்து விடுவதை ''நமது வாழ்க்கையும் இப்படித்தான்'' என்பதை தினசரி நமக்கு ஞாபகப்படுத்துகிறது.

கடலிலிருந்து ஆவியாக மாறி, மலையின்மீது பெய்யப்பட்ட 'மழை ஜலம்' நதியாக மாறி கடலுடன் கடலாக கலக்கும் வரை ஓயாமல் ஓடிக் கொண்டிருப்பதை, பரமாத்மாவிலிருந்து வந்த நமது ஜீவாத்மாவும், ''பரமாத்மாவுடன் கலக்கும் வரை நாம் ஓயாமல் முயற்சி செய்ய வேண்டும்'' என்பதை உணர்த்துகிறது.

கனிதரும் மரங்கள் கல்லடிபட்டாலும் மீண்டும் மீண்டும் பழங்களை காய்ப்பது, அதனுடைய தியாகத்தை தெரிவிப்பதாக இருக்கிறது.

பொறுமையில் சிறந்த பூமாதேவி தன்னை வெட்டுகிறவனையும் தாங்கிக்கொண்டு அவனுக்கு தங்கம், வெள்ளி, வைரம், மாணிக்கம் முதலிய விலையுயர்ந்த பொருள்களை பரிசாகக் கொடுப்பது அதனுடைய பொறுமையைக் காட்டுகிறது.

மணம் நிறைந்த புஷ்பங்கள் தினசரி ஆண்டி முதல் அரசன் வரை எல்லோருக்கும் ஒரே மாதிரி யாக மணத்தைப் பரப்பி, நமக்கு கடமையையும், சமத்துவத்தையும் போதிக்கிறது.

எறும்புகளும், தேனீக்களும் நமக்கு உழைப்பை யும், கூட்டுறவையும், சுறுசுறுப்பையும் கற்றுக் கொடுக்கின்றன.

நாய்களிடமிருந்து நன்றியையும் விசுவாசத்தை யும் தெரிந்துகொள்ளலாம்.

நமது நோய்களை குணமாக்கும் மூலிகைச் செடி கள் தன்னையே அர்ப்பணித்துக்கொண்டு, தனது வேர்களின் மூலம் மக்களுடைய உயிரை காப்பது தியாகத்திற்குச் சிறந்த படிப்பினையாகும்.

காற்றும், மழையும் மக்களிடமிருந்து எந்த விதமான பிரதிபலனையும் எதிர்பார்க்காமல் அவர்களுடைய ஜீவன்களை காப்பாற்றி நமக்கு கடமை உணர்ச்சியை உணர்த்துகின்றன.

இது மாதிரி நமது வாழ்நாள் முழுவதும் மாணுக்கர்களாக இருந்து தினந்தோறும் ஒவ்வொரு நிமிஷமும் புதுப்புது விஷயங்களை பல துறைகளிலும் கற்றுக்கொண்டு நமது அறிவை வளர்த்துக்கொள்ளலாம். அவர்கள் எல்லோரும் நமது போதகர்களே.

இவை எல்லாவற்றிற்கும் மேலாக நம்மை நமது பிறவிப் பிணியிலிருந்து மீட்டி இறைவன் திருவடியை அடைய நமக்கு வழிகாட்டி, நமது ஞானக்கண்களை திறந்து வைப்பவர்தான் நமது ''குருநாதர்'' எனப்படுவார். இந்த ஜென்மத்தில் ஒரு நல்ல குருநாதரை அடையப் பெற்றவர்கள் பெரும் பாக்கியவான்கள். ஏனெனில், குருவுக்கும், சீடனுக்கும் உள்ள தொடர்பு ஆசிரியருக்கும், மாணுக்கனுக்கும் உள்ள தொடர்பை போன்றது அல்ல. முற்பிறப்பின் தொடர்பிஞல் ஏற்படுவது. அந்த தொடர்பு பிரிக்க முடியாதது. தேடி அடைய முடியாதது. தக்க தருணத்தில் இறைவஞல் கூட்டிவைக்கப்படுவது. அவர்களுடைய தொடர்பு உள்ளத்தால், உயிரையும் ஆன்மாவையும் ஒன்ருக பிணைக்கக்கூடியது. இந்தத் தொடர்பு தெய்வீகமானது.

குருவானவர் சீடனை தன்னுடைய சொந்த மகனுக்கு மேலாகக் கருதி, தனக்குத் தெரிந்த வித்தைகளை எல்லாம், ஒளிவு மறைவு இன்றி, சீடனுக்கு கற்றுக்கொடுத்து, இறுதியாக தனது தவ வலிமையிஞல் கிடைத்த சக்திகள் அனைத்தையும் சீடனுக்கு பாய்ச்சி, சொந்தமாக்கிவிடுகிருர்கள்.

சீடனும் குருவின் பாதாரவிந்தங்களில் தன்னையே அர்ப்பணித்து, அவருடைய கட்டளைகளை சிரமேல் கொண்டு, செயல்பட்டு குருவின் குறிப் பறிந்து நடந்து, தானும் நற்கதி அடைவதுடன், குருவிற்கும் சிறப்பை உண்டாக்கி, பரமஹம்சரும், விவேகானந்த ஸ்வாமிகளும் போல உலகம் உய்ய உழைக்க வேண்டும்.

அத்துடன் ஒவ்வொருவருக்கும் வாழ்க்கைக்கு உகந்த வழிகாட்டியாக இருக்கும் அவரவர்களுடைய மனசாட்சியையே அவர்களுடைய சிறந்த குருவாகக் கொண்டு செயல்படவேண்டும் என்று இந்த முப்பத்தி ஒன்றாவது ஸ்லோகத்தில் குருவின் அனுக்கிரகத்தால் ஏற்படும் மகிமைகளை, பகவத் பாதர்கள் விளக்கிக் கூறி, பஜ கோவிந்தத்தை நிறைவு செய்கிறார்கள்.

''சத்குருவின் திருவடிகளே சரணம்''!

சகனுபவது – சகனம் புனத்து - சகவீர்யம் கரவாவகை.
தேஜஸ்வினு வதீதமஸ்து-மாவித் விஷாவகை.

ஓம் சாந்தி — சாந்தி — சாந்தி:

ஓம் பூர்ணமத: பூர்ண மிதம்
பூர்ணாத் பூர்ண முதச்யதே
பூர்ணஸ்ய பூர்ண மாதாய
பூர்ணமேவ அவசிஷ்யதே

ஓம் சாந்தி — சாந்தி — சாந்தி:

---

— சுபம் —

# அன்பே எனது செய்தி - ரஜ்னீஷ்
## எங்கள் மதம்

உலகின் மிக உயர்ந்த மதங்கள் தோன்றி வாழ்ந்த இந்தியாவில், இன்று மதம் தொழிலாகவும், வியாபார மாகவும், நடைமுறை வாழ்க்கைக்கு சம்பந்தமில்லாத தாகவும், வாழ்வை கண்டு பயந்த மக்களுக்கு புகலிட மாகவும் மாறி இருக்கிறது.

பயத்தின் அடிப்படையில் உயிர் வாழும் மதங்கள் உண்மையான மதங்கள் அல்ல. வாழ்க்கையில் கஷ்டங் களை அனுபவிக்கும் மக்களுக்கு கஞ்சா, அபின், சாராயம் போன்று தற்காலிகமான ஆறுதலை கொடுப்பது அல்ல மதம். மக்களுடைய வாழ்க்கையை வளமானதாக ஆக்கி, நீடித்த சுகத்திற்கு வழிகாட்டுவதுதான் உண்மையான மதம்.

மக்கள் வாழ்க்கையை முழுமையாக வாழவும், வாழ்க் கையில் ஏற்படும் சுக துக்கங்களை நேருக்கு நேர் சந்திக்க வைத்து, வாழ்க்கையின் எல்லாப் பரிணமங்களையும் நடை முறையில் கண்டு, அனுபவித்து, வாழ வழிகாட்டுவது தான் மதம். அத்துடன், தனி மனிதன் ஒவ்வொரு வனுடைய **தன்னுணர்வையும்** (Consciousness) முழு நிலைக்கு மாற்ற உதவுவது மதம்.

ஒவ்வொரு மனிதனும் தன் முனைப்போ ''நான்'' என்னும் ஆணவமோ இல்லாமல் தன்னுணர்வில் முழுமை யாக ஒன்றி கரைந்துவிடும்போது, ஆனந்தத்தில் திளைத்து வாழ்கிறான். அப்போது அவன் கடவுள் தன்மையில் இருக்கிறான். அவனை அந்த நிலைக்கு உயர்த்த வழி காட்டுவது மதம்.

ஆகவே மதத்தை பின்பற்றுகிறவர்கள் (எந்த மதத் தினராக இருந்தாலும்) பயத்தை உதறித் தள்ளிவிட்டு தன்னுணர்வோடு வாழவேண்டும். வாழ்க்கையின் ஒவ் வொரு விநாடியையும் முழுமையாகவும், பயனுள்ளதாகவும் வாழ்ந்து, எப்போதும் அன்பு உள்ளத்துடனும், சுறுசுறுப் புடனும், மகிழ்ச்சியுடனும் ஆடியும் பாடியும் தியானத்தில் இருந்தும், அமைதியாக வாழ வழிகாட்டுவதே சிறந்த மதம். நாமும் அந்த வழிமுறைகளை சிந்தித்து வாழ்ந்து வளம் பெறுவோமாக.

ஓம் சாந்தி! சாந்தி!! சாந்தி!!!

கோவை நகை வியாபாரம்

கே. ஆர். & சன்ஸ் ஜுவல்லரி

கே. ஆர். பிள்ளை சன்ஸ்,

ஸ்தாபகர்



அமரர் ஸ்ரீ K. ராமகிருஷ்ண பிள்ளை

நினைவு அஞ்சலி

4—7—1984